# திருவாசகம்

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம்
அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

திரு. ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,
ஆசிரியர், திருக்கோயில்
அறநிலையத்துறை, சென்னை-34



அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்
1982

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்

**பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்கள்**

# அணிந்துரை

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் அவர்களை அறியாத தமிழ்ப் பெருமக்கள் இரார். இவர்தம் தமிழ்ப்பற்றும் சமயப் பற்றும், திருவாசகத்தின்கண் ஈடுபாடும், காந்திய வழித் தொண்டாற்றும் திறனும் ஆகிய உயர்குணங்கள் போற்றற்குரியனவாம்.

இத்தகைய அளப்பரும் பெருமைசான்ற ராய.சொக்கலிங்கம் அவர்கள் நினைவாக 1979-ல் அளிக்கப்பெற்ற அறக்கட்டளையிற் கண்டவண்ணம் 1980 மார்ச்சுத் திங்களில், ''திருக்கோயில்'' எனும் திங்களிதழின் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள், M.A., B.O.L., ஆற்றிய ஐந்து சொற்பொழிவுகளைக்கொண்டு மிளிர்வது இச்சிறுநூல்.

திரு. ந. ரா. முருகவேள்அவர்களின் பரந்த இலக்கண இலக்கியப் புலமையும், மறைமலை அடிகளாரிடத்துக் கொண்டுள்ள அளவிலடங்கா மதிப்பும், ஆங்கிலப் பேரறிவும், நுணிகி ஆராயும் திறனும், இந்நூலால் தெற்றென விளங்கும். திருவாசகக் கருத்துக்களை இனிது அறிய இந்நூல் பெருந் துணைசெய்யும் என்பது உறுதி.

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் அவர்களின் புகழ்

நீடு வாழ்க!

**பேராசிரியர் டாக்டர் நா. பாலுசாமி**
எம்.ஏ; பி.எல்; எம்.லிட்., பிஎச்.டி.
தமிழ்துறைத் தலைவர், இந்திய மொழிப்புல முதன்மையர்
அண்ணாமலைப்பல்கலைக் கழகம்
அண்ணாமலை நகர் 608 002

6—1—82

# முன்னுரை

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் அறக்கட்டளையின் சார்பில் அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் நிகழ்ந்த முதற் சொற் பொழிவு **திருவாசகம்** பற்றியதாகும். ஐந்து சொற்பொழிவு கள் நிகழ்த்தப்பெற்றன. இச்சொற்பொழிவுகளை நிகழ்த்திய பெருமகனார் திரு. ந. ரா. முருகவேள் எம்.ஏ., எம்.ஓ.எல்., ஆவர். இத்தொடர்ச் சொற்பொழிவுகள் இவரால் 1980ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 24 முதல் 28 வரை நிகழ்த்தப் பெற்றன.

திரு. முருகவேள் அவர்கள் அறநிலையத்துறையின் சார்பில் வெளிவரும் **திருக்கோயில்** இதழின் ஆசிரியர். இவர் செந் தமிழ்ப் புலமையும், சிந்தனை வளமும் நிரம்பியவர்; சொல்லாற்ற லும் ஆராய்ச்சி வன்மையும் உடையவர்; நல்ல பண்பாளர். இவர் ஆற்றியுள்ள **திருவாசகச்சிறப்பு, திருவாசகத்தின் இலக்கியத்திறன், திருவாசகமும் திருவருட்பாவும், திருவாசகமும் திருக்கோவையாரும், திருவாசகத் தில் சைவசித்தாந்தம்** ஆகிய ஐந்து சொற்பொழிவுகளும் அறிவுக்கு விருந்தாகும்; ஆராய்ச்சிக்கு வழிகாட்டியாகும். திருவாசகச் சிறப்புக்களுள் முதன்மையானது, "கனிவும் கசிவும் மிக்க அதன் உருக்கத் தன்மையாகும்" என்று இவர் சுட்டுவது சாலப் பொருந்துவதாகும். அன்பின் பெருக்கம், பொய்யிருள் அகற்சி, மகளிர் விளையாடல், பழமொழி, முதலிய பல்வேறு கூறுகளும் சேர்ந்து திருவாசகத் தேனினை அன்பர்க்கும் அடியார்க் கும் அள்ளித்தரும் சிறப்பினை இவர் சித்தரித்துள்ள திறம் சிந்தைக்கு மகிழ்ச்சி தருவதாகும்.

திருவாசகத்தின் இலக்கியத்திறன் என்ற இரண்டாம் சொற்பொழிவில் இவர் பல்வேறு ஆங்கில இலக்கியங்களை மேற்கோள் காட்டிப் பழமையும் புதுமையும் விரவத் திறனாய்வு செய்திருப்பது பாராட்டுக்குரியதாகும். இலக்கியத்தை நுகரும் முறை, பாடலின் பொருள், அணிநலன், சொற்பொருள் இயைபு முதலிய பல்லாற்றானும் திருவாசகம் இங்கு ஆராயப் பெற்றுள்ளது. திருவாசகப் பாடலின் பொருள்நயம் சுவைக்கு முகத்தான், "சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து" என்னும் தொடருக்கு இவ்வாசிரியர் பல்வகையானும் தரும் விளக்கம் சிந்தனையை மேலும் மேலும் வளர்ப்பதாகும்.

திருவாசகமும் திருவருட்பாவும் என்ற தலைப்பில் இவர் ஆற்றியுள்ள மூன்றாம் சொற்பொழிவில் வாசகரும் வள்ளலாரும் இறையனுபவத்தில் இணைந்து செல்லும் விதத்தை விளக்கியிருப்பது பாராட்டுக்குரியது. திருவாசகத் தொடர்கள் பலவற்றைத் திருவருட்பாவில் வள்ளலார் எடுத்தாண்டு விளக்கமும் விரிவும் செய்யும் முறையினை இச்சொற் பொழிவாளர் மிகவும் திறமையாக எடுத்துக் காட்டியுள்ளார். திருவாசகமும் திருக்கோவையாரும் என்ற நான்காம் சொற்பொழிவில் அறிஞர் முருகவேள் அவர்கள் காமச்சுவையும் ஞானப்பொருளும் பிரிவற விரவிக்கலந்திருக்கும் பெற்றியினைப் புலப்படுத்தியிருக்கும் திறம் வியத்தற்குரியது. இறுதியாகத் திருவாசகத்தில் சைவ சித்தாந்தம் என்ற தலைப்பில் நிகழ்ந்த சொற்பொழிவில் சைவ சிந்தாந்தக்கொள்கைகள் திருவாசகத்தில் ஊடுருவியிருக்கும் நுட்பத்தை இவர் மிக நன்கு விளக்கியுள்ளார். இருவினையொப்பு, உருமூன்று, மறக்கருணை முதலிய பல்வேறு உயர்ந்த கொள்கைகளை எளிமையான எடுத்துக்காட்டுக்களின் வாயிலாக இவர் விளக்கிச் செல்லும் திறம் மனங்கொள்ளத்தகும்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இணைவேந்தர் செட்டி நாட்டரசர் **முத்தையவேள்** அவர்களின் பேராதரவும் இத்துணைச் சொற்பொழிவுகள் நிகழ்வதற்குக் காரணமாம். அப்பெரு மகனார்க்கு யான் என்றும் நன்றி பாராட்டக்கடமைப்பட்டிருக்

கிறேன். இப்பல்கலைக் கழகத்தின் புகழை மேலோங்கச் செய்வதில் பெரிதும் கவனஞ் செலுத்தும் துணைவேந்தர் **பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு** அவர்களுக்கும் தமிழ்த் துறையின் சார்பாக எனது உளமார்ந்த நன்றியை உரிமைப்படுத்து கிறேன். உயர்ந்த ஆராய்ச்சி நூல்களை வெளியிடுவதில் பெருமை பெற்று விளங்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் வெளியீட்டுப் பிரிவு இவ்வரிய ஆராய்ச்சி நூலினையும் தமிழகத் திற்கு வழங்குவது சாலப் பொருத்தமுடையது.



# பொருளடக்கம்




| | | |
|---|---|---|
| 1. | திருவாசகச் சிறப்பு | 1 |
| 2. | திருவாசகத்தின் இலக்கியத்திறன் | 24 |
| 3. | திருவாசகமும் திருவருட்பாவும் | 64 |
| 4. | திருவாசகமும் திருக்கோவையாரும் | 76 |
| 5. | திருவாசகத்தில் சைவசித்தாந்தம் | 84 |
| | முதற்கட்டுரைக்குரிய அடிக்குறிப்புக்கள் | 112 |




# 1

# திருவாசகச் சிறப்பு

## முன்னுரை :

அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ் மொழியின்கண் உள்ள, அரும்பெறற் சிறப்பு நூல்கள் பலவற்றுள் திருவாசகமும் ஒன்றாகத் தலைசிறந்து முதன்மை மிக்குத் திகழ்வதாகும். இத் தென்றமிழ் நாடெங்கணும் உள்ள சைவத்தமிழ் மக்கள் அனைவரும், திருவாசகத்தினைத் தம் உயிரினும் இனிய விழுமிய தெய்வத்திரு நூலாகப்பெரிதும் மதித்துப்பேரன்புடன் ஓதிப்போற்றி வருகின்றனர் சிறப்பாகத் தமிழகத்தின்கண் உள்ள சைவப் பெருமக்கள் எல்லோர்க்கும், ஒப்புயர்வற்ற மிகமேலான முதற்பெருமறை நூலாகத் திருவாசகம் விளங்கி வருகின்றது. தமிழ் கூறும் நல்லுலகம், திருவாசகத்தினை இலக்கியம் மொழி கவிதை சமயம் ஞானம் அனுபவம் அருள் முதலிய பல துறைகளிலும் மிகப் பெருஞ் சிறப்பு வாய்ந்ததொன்றாகக் கொண்டு பாராட்டி மகிழ்ந்தின்புறுகின்றது.

## கவிதை இன்பம் :

எண்ணிறந்த உலகியலின்பங்களை எல்லாம் பொறியின்பம் கலையின்பம் என இரண்டாகப் பிரிக்கலாம். பொறியின்பங்களைவிடக் கலை இன்பமே உயர்ந்ததாய், நிலையானதாய், மேன்மேலும் நலம் பயப்பதாய் விளங்குவதாகும். அக்கலையின்பம் மிகப் பலவகைப்படும். அவ்வெல்லாவற்றிலும் தலைசிறந்தது கவிதைக்கலை இன்பமே யாகும். இசை, சிற்பம், ஓவியம், நடனம், நாடகம் முதலிய மற்றெல்லாக் கலைகளின் இன்பத்தையும்விட, நிலைபேறானதும் எளிதிற்கிடைப்பதும் எவரும்பெற்று நுகரக்கூடியதும்,அடிப்படையாய் அமைவதும் கவிதை இன்பமேயாம். உள்ளம் உருகப்பாடும் இசைப் புலவனின் இசையும், கண்களிக்கக் காட்டும் சிற்பியின் ஓவியமும்,

கண்ணும் செவியும் மகிழ நடிக்கும் பொருநனின் கூத்தும் பிறவும், நல்லிசைப்புலவன் ஒருவனது செய்யுளைப்போல் நமக்கு எக்காலத்தும் எவ்விடத்தும் நிலைபெற்ற இன்பத்தை விளைவிக்க மாட்டா. ஏனைக் கலைஞர்கள் விளைவிக்கும் இன்பங்களெல்லாம் ஐம்புல நுகர்ச்சியாய், சிற்றின்பங்களாய் விரைவில் அழிந்தொழிய, நலஞ்சிறந்த ஒரு கவிஞன் விளைவிக்கும் இன்பமோ உணர்வையும் உள்ளத்தையும் கவர்ந்து நிலைபெற்று நின்று, அறிவும் இன்பமும் நல்கி உயிர்க்குப் பேரின்பம் உண்டாக்கும். இவ்வாற்றால் இணையின்றிச் சிறந்திலங்கும் கவிதை இன்பத்துறையில் வைத்துச் சீர் தூக்கிப் பார்க்கலுறின், திருமுறைகளின் பெருமை அளவிடற்கரியதாக உளது; திருவாசகக் கவிதைகளைப் பொருளுணர்ந்து நெஞ்சம் நெக்குருகி அன்போடு இசைநலமும் கெழுமத் தக்கோர்கள் பாடக் கேட்குங்கால், விளையும் இன்பத்தினை என்னென்பது?

> "வள்ளுவர்நூல், அன்பர்திரு வாசகம், தொல் காப்பியமே,
> தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை, – ஒள்ளியசீர்த்
> தொண்டர் புராணம், தொகுசித்தி, ஓராறும்
> தண்டமிழின் மேலாந் தரம்"
> "தேவர் குறளும், திருநான் மறைமுடிவும்,
> மூவர் தமிழும், முனிமொழியும், – கோவை
> திருவா சகமும், திருமூலர் சொல்லும்,
> ஒருவா சகம்என் றுணர்"

எனவரும் பாடல்களால், தமிழ் மொழியிலுள்ள தலைசிறந்த ஒப்புயர்வற்ற பெருங்கவிதை நூல்களுள் திருவாசகமும் ஒன்றாதல் உணரலாம்.

இனி, கவிதைகளை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒருவகை கற்றுயர்ந்த பேரறிஞர்கள் மட்டுமே சுவைத்துக் களிக்கத் தருவது. பிறிதொருவகை, கல்வியறிவு இல்லாதவர்களால் மட்டுமே விரும்பிப் போற்றப்படுவது. இவ்விரண்டனுள் ஒன்றாக மட்டும் அமையும் கவிதைநூல் எதுவும், அத்துணைச் சிறந்ததாகாது. கற்றார் கல்லார் என்னும் இருதிற மக்களும் விரும்பிப் போற்றித் திகழும் நூலே, மிகவும் சிறந்த தொன்றாகும். மிகச்சிறந்த பெருங் கவிஞராகிய

செகப்பிரியர் (Shakespeare) கற்றோர்கள் படித்துச்சுவைத்து இன்புறத் தரும் அரிய உயர்ந்த கவிதைப் பகுதிகளும், கல்லாதார் கண்டு மகிழத்தக்க பலவகையவாய் எளிய நகைவேழம்பப் பகுதிகளும் ஒருங்கமையத் தமது நாடகங்களை இயற்றியுள்ளமை காணலாம். அதற்கேற்ப, பேரறிஞர்கள் சுவைத்து உவக்கத் தகுந்த இறையருளின்ப அநுபவ நலச் செய்திகளையும், கல்லாதார் உள்ளங்களைக் கவர்ந்து அவர்கள் கேட்டு மகிழ்தற்குரிய பலதிறப் புராண கதைகளையும் இணைத்து, திரி சொற்களும், கொச்சைச் சொற்களும், மறை பொருட் குழூஉச் சொற்களும் விரவாமல், எளிய இனிய தெளிவான செவ்விய சிறந்த நடையில், சிறந்துயர்ந்த செந்தமிழ்க் கவிதைகளாக்கித் திருவாசகமாகத் தந்தருளிய மாணிக்கவாசகரின் புலமை மாட்சிமை சாலப் பெரியதாகும். "பெரும்பாலான எல்லாப் பொதுமக்களையும் மகிழ்வுறுத்தும் நோக்கத்தின் பொருட்டே, எளிய இனிய கவிதையழகுகளாகப் புராண கதைகளும் கற்பனைகளும் திருவாசகத்தின் இடையே இணைத்துத் தொடுக்கப்படுகின்றன" [1] எனப் பேரறிஞர் போப் துரைமகனார் அவர்கள் கூறுதல், ஈண்டு கருதற்பாலது. இங்ஙனம் கல்லாப் பொதுமக்களுக்கெல்லாமும் இறைவனது அருட்பெருந் திறங்களை விளக்கும் முறையில், திருவாசகத்தின்கண் இடையிடையே போதரும் பல அருள் நிகழ்ச்சிகளும், மெய் வரலாறுகளும், புராண கதைகளும் பற்றிய குறிப்புக்கள் தாமும், திருவாசகத்திற்கு ஒருவகையழகும் சுவையும் நல்கி அதன் சிறப்பினைப் பெரிதும் மிகுதிப்படுத்துகின்றன!

ஆங்கிலப் பேரறிஞர் ஒருவர் (John Ruskin) "இயற்கைக் குரல்கள்" (Genuine Voices) என்றும், "வெறும் செயற்கை எதிரொலிகள்" (Mere Echoes) என்றும் நூல்களை இரு திறனாகப் பிரித்து, சிறந்த பேரிலக்கியங்கள் எல்லாம் இயற்கைக் குரல்களாம் என்றும் ஏனைப் புல்லியபோலி நூற்களெல்லாம் வெறும் செயற்கை எதிரொலிகளாம் என்றும் இனிது இயம்பினார். தொல்காப்பியரும் இக்கருத்துப்பட முதல்நூல், வழிநூல் என்பர். அம்முறையிற் கருதுகின்றுழி, இறையருளின்ப அனுபவ நல உணர்ச்சிகளை உள்ளவாறு இயல்பாக எடுத்துப்பாடி, நம்மனோர்க்கு அளப்பரும் நலம்பல விளைக்கும் திருவாசகமானது, இயற்கைக் குரல் நூல்

வகையினையே சேர்ந்த சிறந்ததொரு பேரிலக்கிய முதல் நூலாதல் காணலாம்.

திருவாசகத்தைப் பொருணர்ந்து பக்தி மீதூர்ந்து ஓதுபவர் எவராயிருப்பினும், அவர்கள் வேறெங்கும் காணாத ஒருவகைப் பேரின்ப உவகை உணர்வு எய்தித்தம் உடம்பும் உள்ளமும் உயிருமெல்லாம் அதன் வயமாய் நிற்கப்பெற்று, வாழ்வியல் நலமனைத்தும் படிப்படியே எய்தி, இறையருளில் திளைத்து மகிழ்வார் என்பது திண்ணம். திருவாசகம் தன்னை ஓதுபவர் உள்ளத்தையும் உணர்வையும் உயிரையும் எல்லாம் உருக்கிப் புனிதப் படுத்தும் திறனில், பிற நூல்களினும் தலைசிறந்து திகழ்கின்றது என்பது, சான்றோர்கள் அனைவரும், தம் அனுபவத்திற் கண்டுணர்ந்த உண்மையாகும்.

மக்கட் பிறவியின் இழிதகைமையையும், பல்வகைக் குறைபாடு களையும் இறைவன் முன்னிலையில் எடுத்தெடுத்து இயம்பிப் பராவித் துதித்து, மக்கள் உள்ளத்தையெல்லாம் கரைத்துத் தூய்மை செய்வதன்கண், நம் மணிவாசகப் பெருமான் அருளிச் செய்த திருவாசகம், பெரிதும் தலைசிறந்த, ஒரு தெய்விகப் புனித நூலாய்த் திகழ்கின்றது என்று துணிந்து கூறலாம்.

திருவாசகத்தைத் தமது அன்பிற்குரிய இன்ப நூலாகக்கொண்டு, ஓதி ஓதி மகிழ்ந்த இராமலிங்க அடிகளார், திருவாசகத்தின்கண் வரும் ஒரு சிறு சொற்றொடர் அல்லது ஒரு மொழியே, நமக்கு எல்லா வகையான நலங்களையும் விளைவிக்க வல்லது என்று போற்றிப் புகழ்ந்து பாராட்டுகின்றார்;

வருமொழிசெய் மாணிக்க
வாசக! நின் வாசகத்தில்
ஒருமொழியே என்னையும்என்
உடையனையும் ஒன்றுவித்துத்
தருமொழியாம் என்னில், இனிச்
சாதகம்ஏன்? சஞ்சலம்ஏன்?
குருமொழியை விரும்பி, அயல்
கூடுவதேன்? கூறுதியே!

என அவர் அருளிச் செய்துள்ள திருவருட்பாச் செய்யுளில், திருவாசகத்தின் ஒப்புயர்வற்ற சிறப்பினை, அவர் மிகவும் வியந்து வியந்து புகழ்ந்துரைத்தல், நாம் பெரிதும் உணர்ந்து உய்தற்குரியது.

## சிறந்த கவிதை நூல் :

''ஒரு சிறந்த கவிதையானது, அதனைப்பாடும் கவிஞனின் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டே, முகிழ்த்து அரும்பி மலர்கின்றது; அஃது அவ்வனுபவத்தைத் தன்னைப்பயிலும் பிறரும் அடையுமாறு செய்து மகிழ்விக்கின்றது'' என்று கவிதையியல் ஆராய்ச்சி அறிஞர்கள் கூறுவர்.

சங்ககாலப் பெருங் கவிஞர்களும் பிறரும் மெய்வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளின் அளவிற்குட்பட்ட, அகப்பொருள் புறப்பொருள் பற்றிய செய்திகளையும், அனுபவங்களையும் பற்றி மட்டுமே பாடிச் சென்றனர். ஆனால் நம் மணிவாசகப் பெருமானோ, தம் ஐம்பொறிகளின் உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட, கடவுட் பெரும் பொருளின் அருளனுபவ நலங்களை அறிந்தும் நுகர்ந்தும், அழகொழுகும் இனிய கவிதைகளில் திருவாசகமாக அருளிச் செய்துள்ளார்; 'கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்' என்னும் பழமொழியைப் பொய்யாக்கி, இறைவனைக் கண்டதுடன், அவனது அருள்மாட்சிமைகளை, நாம் வியந்து இனிது மகிழும் வண்ணம் விண்டுமொழிந்தருளியவர், மணிவாசகர் ஆவார்.

> ''கண்ணால் யானும் கண்டேன் காண்க
> அருள்நனி சுரக்கும் அமுதே காண்க
> கருணையின் பெருமை கண்டேன் காண்க
> சிவன்என யானும் தேறினன் காண்க
> புவனியில் சேவடி தீண்டினன் காண்க
> அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க
> குவளைக் கண்ணி கூறன் காண்க
> அவளும் தானும் உடனே காண்க''

எனவரும் திருவாசகப் பகுதி இவ்வுண்மையைச் செவ்விதின்

வலியுறுத்தி நிற்பது காணலாம். "இங்ஙன் இருந்தது என்று எவ் வண்ணம் சொல்லுகேன்? அங்ஙன் இருந்தது என்று உந்தீபற, அறியும் அறிவுஅது அன்று உந்தீபற" என்றும், "அவ்வாறு அறிவார் அறிகின்றது அலால், எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே" என்றும், பெரியோர்கள் அருளிச் செய்தபடி, பிறருக்கு எடுத்துச் சொல்லுவதற்கும், எழுதிக் காட்டுவதற்கும் ஒரு சிறிதும் இயலாத, இறையியற் பேரின்ப அருளனுபவ நலங்களை யெல்லாம், நம்மனோர்க்கு இனிது எடுத்துச் சொல்லியும், அழகுற எழுதிக் காட்டியும் விளக்குவது, திருவாசகத்தின் கவிதைப் பெருஞ் சிறப்பு எனலாம்.

## அருளனுபவப் பெருநூல் :

"எல்லாம் வல்ல சிவபெருமான், எனக்குத் தடக்கையின் நெல்லிக்கனி போல்பவன் ஆயினன். அவன் என்பாற் செய்த பேரருளின் திறனை, யான் பிறர்க்கு எடுத்துச் சொல்லும்வகை இன்னதென்று அறிகிலேன் நாயை ஒத்தவனான யான், அவன் என்பாற் செய்த பேரின்பத்தினைத் தாங்குதற்கு இயலாமல் உள்ளேன். அவன் என்னை என்ன செய்தான் என்பதும் எனக்குத் தெரியவில்லை. ஐயோ, யான் என்னுணர்வையே இழந்துவிட்டேன். அவன் எனக்கு அருள்புரிந்த திறன் இது என அறிகின்றிலேன். அவன் வழங்கிய பேரின்பத் தேறலை யான் குடித்தும் நிறைவு பெற்றிலேன். விழுங்கியும் பொறுத்துக் கொள்ளமாட்டாமல் உள்ளேன். செழுந்தண் பாற்கடலின் அலைகளைப்போல் மிகத் தூயதும், மேன்மேற் பொங்கி வழிவதும் ஆகிய அப்பேரின்பம் அவனால் எனக்குக் கிடைத்தது. நிறைநிலாக் காலத்தில் கடலின் நடுவில் உள்ள நீரைப்போல, சொல்லின் எல்லையைக் கடந்த அப்பேரின்ப அமிழ்தமானது, என் உள்ளம் முழுவதும் நிறைந்து மேன்மேற் பொங்கித் ததும்பும் படியும், என் மயிர்க்கால்கள்தோறும் தேங்கிப்பெருகி நிற்கும்படியும், அவன் செய்துவிட்டான்; நாய் போன்ற சிறுமையை உடைய, என் உடம்பினுள்ளே அப்பெருமான் எழுந்தருளித் தனக்கு ஒரு சிறிய வீட்டை அமைத்துக் கொண்டான்; கொடியவனாகிய எனது ஊன்மிகுந்த உடம்பெல்லாம் இனிய

தேனைப்பாயச் செய்தான்; யான் இதற்கு முன் அறியப்பெறாத புதுமைமிக்க அற்புதமான அமுததாரைகளை, எனது என்புத் துளைகளிலெல்லாம் ஏறும்படிச் செய்தான். உருளும் இயல்பிற்றாகிய உள்ளத்தினையே ஒரு வடிவமாகச் செய்ததுபோல, எனக்கு முழுவதும் உருளும் தன்மையுடைய உடம்பை அமைத்து வைத்தான். ஒன்றுக்கும் பற்றாத என்னையும், மதக்களிப்பு மிக்க ஆண் யானை போல, மிகமேலான உயர்ந்த பேரின்பத்தில் நிலை பெற்றிருக்குமாறு செய்துவிட்டான். என்னுடைய உள்ளும் புறம்பும் தன்னுடைய கருணையாகிய தேன் கலந்து நிறையும்படி செய்தான். தனது அருளுடன், மிக மேலான அமிழ்தத்தையும் மேன்மேற் பெருகும்படி, பிரமனும் திருமாலும் அறியாத பெற்றிமையை உடைய சிவபெருமான், எனக்கு வழங்கியருளினான்''

- என்று மணிவாசகர், சிவபெருமான் தம் மாட்டுச்செய்த திருவருட் பேரின்பப்பக்தி ஞானப்படிநிலை அனுபவச் செய்திகளையெல்லாம், தமது திருவாசகம் திருவண்டப் பகுதியின்கண் கிளந்தெடுத்துக் கூறி விளக்கியருள்கின்றார். இதுபற்றியே,

> ''உருவண்டப் பெருமறைஎன்று உலகமெலாம் புகழ்கின்ற
> திருவண்டப் பகுதிஎனும் திருவகவல் வாய்மலர்ந்த
> குருஎன்றுஎப் பெருந்தவரும் கூறுகின்ற கோவே நீ
> இருஎன்று,அத் தனியகவல் எண்ணம்எனக்கு இயம்புதியே''

என்று வடலூர் அருட்டிரு இராமலிங்க அடிகளார், 'திருவண்டப்பகுதி என்னும் திருவாசகத் திருவகவலைச் சிறந்தெடுத்துப் போற்றி வியந்து புகழ்கின்றார்.

## அண்டத்து அரும்பெறல் மேகன் :

திருவாசகத்தின் கவிதைக் கற்பனை நலம், இலக்கிய எழில், இன்பச்சுவை, தத்துவ நுண்பொருட்செறிவு முதலியவற்றிற்கு, ஈண்டு ஓர் எடுத்துக்காட்டு மட்டுமே சாலும். மாணிக்கவாசகர், இறைவன் தமக்கு மிகவும் தண்ணளியோடு எளிவந்து, தம்பாற் சிவானந்தம் ஆகிய பேரின்ப மாரியினை, வரையா வண்மையிற்

கைம்மாறு கருதாமல் தனது பேரருட் பெருந்தகைமையாற் பெரிதும் வழங்கிப் பொழிந்தனன் ஆகலின், இறைவனை 'அண்டத்து அரும் பெறல் மேகன்' என விதந்து மகிழ்ந்துரைக்க விரும்புகின்றார். அக்கருத்தினைத் தமது நுண்மாண் நுழைபுலம் தோன்றவும், உணர்ச்சிநலமும் கற்பனை வளமும் பொலியவும், அழகுற உருவகம் செய்து பின்வருமாறு, அவர் பாடுகின்றார் :

"மிக மேலான இன்பப் பழங்**கடல்** என விளங்கும் சிவ பரம்பொருள், கரிய பெரிய **மேகம்** போலத் தோன்றி, திருப்பெருந் துறை என்னும் **மலை**யின்மீது ஏறி, விந்து தத்துவம் ஆகிய **மின்னல்** ஒளியினை எல்லாத் திசைகளிலும் பரவுமாறு செய்து, ஐம்புல அவாக்கள் ஆகிய **பாம்புகள்** இரிந்து ஓடவும், உலகியல் துன்பங்கள் ஆகிய **கோடை** கால வெம்மை ஒழியவும், அருள் **மழை**யினைப் பொழிந்தது.

அதுபோது நாத தத்துவம் ஆகிய **பறையை** அறைத்தாற் போல, அஃது இடிமுழக்கம் செய்தது. அங்ஙனம் மின்னியும் இடித்தும் மழை பொழிந்த நிலையில் இந்திரகோபம் என்னும் **தம்பலப் பூச்சிகள்**, உயிர்களின் அளவில்லாத பிறவிகளைப் போல மிகுத்துக் காணப்பட்டன. கார்காலத்திற்குரிய **தோன்றி** மலர்கள் பூப்பது போலச், சிவபரம்பொருளின் 'அஞ்சல்' என்ற திருக்கை விளங்கியது. **காந்தள்** மலர்களைப்போல, அடியார் களின் கூப்பிய கைகள் திகழ்ந்தன. அருளாகிய **வெள்ளம்,** இன்பம் ஆகிய சுழிகளைச் சுழலவிட்டுக் கொண்டு பெருக்கெடுத்து ஓடுகின்றது.

இவ்வருள் வெள்ளத்தின் நீரைத் தலைப்பட்டுப் பருகுதற்குத் தவப்பேறு ஒரு சற்றும் வாய்க்காத பேதை உயிர்கள் ஆகிய **மான் கூட்டங்கள்,** பிறவித்துன்பமாகிய **நீர்வேட்கை** மேற்கொண்டு அறுவகைப் புறச் சமயங்களாகிய **கானல்** நீரினை, உண்மைநீர் என்று மயங்கி, அலைந்து திரிந்து வருந்துகின்றன.

இந்நிலையில் அருள் வெள்ளமானது பெருகுதலாய், மலப் பிணிப்பு ஆகிய பந்தம் என்னும் **ஆற்றின் கரைகள்,** இரு

புறத்தும் இடிந்து சிதைந்து அழிகின்றன. இருவினைகளாகிற பெரிய வேரொடு **மரங்கள்,** வீழ்த்தப்படுகின்றன. இவ்வருள் வெள்ளத்தினை, அடியார்கள், தங்கள் உள்ளமாகிய பெரிய **குளங்களில்** நிரப்பிக் கொள்கின்றனர்.

அங்ஙனம் நிரப்பிக்கொண்ட அடியார்களாகிய **உழவர்கள்,** வழிபாடு என்னும் **வயல்களில்,** அன்பு எனும் **விதையினை** விதைத்து, பேரின்பமாகிய **பயிர்** நன்கு விளையும்படி செய்து, சிவபோகமாகிய சிறந்த **விளைவு** நலனை நிரம்பத் துய்த்து மகிழ்கின்றனர். இங்ஙனம் அருச்சனை வயலில், அன்பு விதை விதைத்துத் தொண்டர்களாகிய உழவர்கள், பேரின்பம் ஆகிய பயிர் விளையும்படி செய்து, **சிவபோகம்** என்னும் நுகர்ச்சியை நிரம்பத் துய்த்து இங்கு மகிழும்படி அருளைச்செய்த, **அண்டத்து அரும்பெறல் மேகம்** போன்றவனாகிய சிவபெருமான் நீடு இனிது வாழ்க!".

திருவாசகத்தில் 'திருவண்டப்பகுதி' என்னும் அகவலின் கண் (66-95) வரும் இவ்வரிகள், எழில் நலம் கனிந்து, 'இயைபு முற்றுருவகம்' என்னும் அணியாக, இன்சுவை பெருக வருதல், தேன் என இனிக்கும் திருவாசகத்தின் கவிதை நல இலக்கியச் சுவைத் திறனை, விளக்கப் போதிய சான்றாகும்.

## உருக்கத் தன்மை :

திருவாசகத்தின் சிறப்பியல்புகளுள் மிகவும் முதன்மையானதும், மேலானதுமாகக் கிளர்ந்து குறிப்பிடற்பாலது, கனிவும் கசிவும் மிக்க அதன் உருக்கத்தன்மையாகும். சிவபெருமான் "தப்பாமே தான் அடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினான்" ஆதல் போல, நம் ஆருமைத் திருவாசகத் திருமறையும் தப்பாமே ஓதவோர் நெஞ்சுருக்கும் தன்மை வாய்ந்தது. தன்னை ஓதுவோர் கன்னெஞ்ச மெல்லாம் கரைந்துருகச் செய்யும் பெற்றிமை மிக்கது திருவாசகம். கற்றார் கல்லார் என்னும் எல்லார் உள்ளங்களிலும் நெகிழ்ச்சியை யுண்டாக்கி உருக்கம் விளைவித்தற்கண், வேறு பிற எந்நூலும் திருவாசகத்திற்கு இணையாகாது என்பது அறிஞர் அனைவரும்

ஒருமுகமாக உடன்பட்டதொன்று. "திருவாசகத்திற்கு உருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார்'' என்பது தமிழ்நாட்டுப் பழமொழி. "வாக்கிற்கு அருணகிரி, வாதவூரர் கனிவில்'' என்பது சான்றோர் ஒருவரின் மதிப்பீடு.

> "திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்
> கருங்கல் மனமும் கரைந்துகக், கண்கள்
> தொடுமணற் கேணியில் சுரந்துநீர் பாய,
> மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பு எய்தி
> அன்பர் ஆகுநர்......"

எனத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் புகழ்ந்து போற்றி யுள்ளமையினை, அனைவரும் அறிவர்.

> "மனங்கரைத்து மலங்கெடுக்கும்
> வாசகத்தின் மாண்டோர்கள்,
> கனம்சடைஎன்று உருவேற்றிக்
> கண்மூடிக் கதறுவரே?''

எனப் பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை அவர்கள் அருளிச்செய்திருக்கும் பொருளுரையும், இவ்வுண்மையினை இனிது வலியுறுத்தும். திருவாசகத்தின் இவ்வுருக்கத் தன்மையினைச் செவ்விதின் விளக்கும் சில தொடர்கள் வருமாறு:

1. புன்மையேனை ஆண்டு ஐயா புறமே போக விடுவாயோ? 2. என்னை நோக்குவார் யாரே? என் நான் செய்கேன்? எம்பெருமான்! 3. அடியேன் அல்லேன் கொல்லோ? தான் எனை ஆட்கொண்டிலை கொல்லோ? 4. அருளாது ஒழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர் இங்கு? 5. செத்தே போனாற் சிரியாரோ? 6. நரிப்பாய் நாயேன் இருப்பேனோ? 7. அழுமதுவேயன்றி மற்று என்செய்கேன்! 8. சேயனாகிநின்று அலறுவது அழகோ? 9. அடியேனன் இடர்ப் படுவதும் இனிதோ? 10. ஆரோடு நோகேன், ஆர்க்கு எடுத்துரைப் கேன், ஆண்ட நீ அருளிலை யானால்? 11. பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ? 12. திகைத்தால் தேற்ற வேண்டாவோ? 13. சவலை

யாய் நாயேன் கழிந்து போவேனோ? 14. நாயேன் அடிமை யுடனாக ஆண்டாய், நான்தான் வேண்டாவோ? 15. ஆவா என்னா விடில் என்னை, அஞ்சேல் என்பார் ஆரோதான்?

என்பன போன்று பலபட வரும் இத்தொடர்கள் எத்துணை உருக்கத் தன்மை மிகுந்துள்ளன. திருவாசகத்தின்கண் இடையிடையே இவ்வாறு பயின்று வரும் இத்தொடர்கள் பலவற்றின் இடங்களை யும், அவற்றின் முன்பின் இயைபுகளையும், அரிய பொருள் நலங் களையும் எண்ணி எண்ணிப் பார்க்கலுறின், எத்தகைய கல்நெஞ்ச மும் கரைந்துருகும் என்பதில் ஐயம் உண்டோ?

## அயரா அன்பு :

திருவாசகத்தின்கண் காணப்படும் சிறப்பியல்புகளுள், அதன் அயரா அன்புத்திறனும் ஒன்றாகும். அன்பே உயிருணர்ச்சிகள் அனைத்திலும் தலைசிறந்ததும், தெய்வத்தன்மை வாய்ந்ததுமாகத் திகழ்கின்றது. அன்புணர்ச்சி மேலோங்க, ஏனைத்தீய உணர்ச்சிகள் தேய்ந்து சிதைந்தொழிய, மனிதன் இறைநிலைக்கு முறை முறையே உயர்ந்துயர்ந்து செல்லுகின்றான். இத்தகைய அன்புணர்ச்சி யினையே முதலும் இடையும் முடிவுமாம் அடிப்படைப் பொருளாகக் கொண்ட நூல் திருவாசகமே எனின் அதன் சிறப்பிற்குக் காரணம் கூறுதல் வேண்டுமோ என்பது?

திருவாசகத்தின் பொருள் அன்பே வடிவான சிவம்; திருவாசகத் தைப் பாடியவர் அன்பின் பிழம்பே எனத்தகைய மாணிக்கவாசகர்; திருவாசகப் பாடல்கள் அன்புணர்ச்சி பெருக்கு எடுத்தோடும் அரும் பெறற் கவிதை வெள்ளம் எனின், வேறு பிறிது கூறுவது யாதுளது? திருவாசகம் போல வேறு பிறிதொரு நூலும் அன்பினை வலியுறுத்தி அடுத்தடுத்துக் குறிப்பிட்டுப் பலபடியாக எடுத்து மொழிந்திருத்தலை நாம் யாண்டும் காண்கிலம்.

1. நின்றன் வார்கழற்கு அன்பு எனக்கு நிரந்தரமாய் அருளாய் 2. வேண்டும் நின் கழற்கண் அன்பு 3. இல்லை நின்கழற்கு அன்பது என்கணே 4. இடையறா அன்பு உனக்கு என் ஊடகத்தே நின்றுருகத்

தந்தருள் 5. ஆடுகின்றிலை கூத்து உடையான் கழற்கு அன்பு இலை 6. யானே பொய் என் நெஞ்சம் பொய், என் அன்பும் பொய் 7. கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு இன்மை கண்டபின் 8. மெய் கலந்த அன்பர் அன்பு எனக்கு ஆக வேண்டுமே,

– என்றிங்ஙனம் அடுத்தடுத்துப் பலகாலும் அன்பினைப் பற்றித் திருவாசகம் எண்ணிறந்த பல இடங்களிற் குறிப்பிடுமாறு போலத் தமிழ்நூல் பிறிதொன்றும் குறிப்பிடுகின்றிலது.

மாணிக்கவாசகர் போல, இறைவன்பால் தமக்கு அன்பு சிறிதும் நிகழ்கின்றிலதென்றும், தமது அன்பு வெறும் பொய்யன்பே, மெய்யன்பு அன்று என்றும், இறைவனே தமக்கு மெய்யன்பு நிகழுமாறு அருள்புரிதல் வேண்டும் என்றும், அன்பால் அகங்குழைந் துருகி அழுதழுது அரற்றிப் புலம்பிப் பாடிய"உண்மையன்பர் வேறு பிறர் எவரும் இலர். ஆதல் பற்றியே கவிஞர்களுள் 'கற்பனைக் களஞ்சியம்' என்னும் சிறப்பியற் பெயர் எய்திய துறைமங்கலம் சிவப்பிரகாசர்,

''அருங்கனி வாத வூரனே முதலோர்
அன்பிலேம் என்றது வேண்டி
இரங்குதல் பொய்ம்மை; அன்பிலேன் எனயான்
இயம்பலே மெய்; எனக்கு அருளாய்...''
–சோணசயிலமாலை

என்று மிக நயம்பட இனிதருளிச் செய்தனர். இவ்வாற்றால் திருவாசகம் அன்பினையே அடிப்படையாகக் கொண்ட பேரிலக்கிய மாதல் தெளியலாம்.

## தாழ்வெனும் தன்மை :

திருவாசகத்தின் சிறப்பியல்புகள் பலவற்றுள் அதன்கட் பெரிதும் காணப்படும் தாழ்வெனும் தன்மையும் ஒன்றாகும்.

''வாழ்வெனும் மையல்விட்டு
வறுமையாம் சிறுமை தப்பித்

தாழ்வெனும் தன்மையோடு
சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது......"

–சிவஞானசித்தியார்

என அருள்நந்தி சிவனார் கூறுதலின், சைவ சமயத்திற்குத் தாழ்வெனும் தன்மை மிக மிக இன்றியமையாத தென்பது பெறப்படும். இத் தாழ்வெனும் தன்மை, அறிவின் உயர்ந்து தம் குற்றங் குறைகளைத் தாமே கண்டுணர வல்ல நல்லார்க்கே அமைவதாகும். ஏனையோர் அதனை வாய்ப்பப் பெறாது செருக்கும் சினமும் சிறுமையும் உற்றுச் சிதைந்தொழிவர். "நான் எனது குற்றங் குறைகளை என்உள்ளம் வருந்தும் அளவிற்கு நன்றாக உணர்ந்திருக்கின்றேன்; அங்ஙனம் உணர்ந்திருப்பதில்தான், யான் பெற்றுள்ள ஆற்றலெல்லாம் அமைந்து கிடக்கின்றது! ஏனெனில், ஒரு மனிதனுக்குத் தன் குற்றங்களைத் தானே உணர்ந்து கொள்ளப் பெறுதல்தான், ஓர் அரும்பெருஞ் செயல் ஆகும்" எனவரும் காந்தியடிகள் கூற்றும், ஈண்டு நாம் நினைவு கூரற்பாலது.

இங்ஙனம் தமது குற்றங்குறைகளைத் தாமே உணரவல்ல பெருமக்களே "குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமுதாய்க் குணப்பெருங் கடலாய்" விளங்கும் இறைவனின் அருமை பெருமைகளை யுணர்ந்து, அவனை வழிபட்டுய்யும் பெறலரும் பேறு பெறுவர். இறைவனின் அருளை அடையப்பெற்று, அவனை நேரிற் கண்ணாரக்கண்டு, அவன்றன் அளப்பரும் பெருமைகளை அறிந்து உணர்ந்தோர்க்கே, தமது சிறுமையும் பன்மையும் இழிவும் இனையவென முழுவதும் தெரிந்து தெளிதல் இயலும். அதனால் தான் ஞானிகள் அனைவரும், அவைகள் பலவேறு காலங்களில் பலவேறு நாடுகளில் தோன்றியவர்களாக இருந்தபோதிலும், ஒரே மதத்தினராய்த் தம்முள் வேறுபாடு எதுவும் இன்றி, தம்மைப் பல வகைகளில் தாழ்த்திப் பழித்துக்கொள்ளுதலைக் காண்கின்றோம். "எல்லா வகையான இன்பநுகர்ச்சிகளையும் வெறுத்தொதுக்கிவிடும் ஞானிகள், தம்மைத் தாழ்த்திப் பழித்துக்கொள்ளுதலையே ஒரு பெரும் இன்ப நுகர்ச்சியாகக் கருதுகின்றனர்" என வொர்ட்ஸ்வொர்த் என்னும் ஆங்கிலப் பெருங்கவிஞர் பாங்குறக் கூறுகிறார்.

மாணிக்கவாசகர் இறைவனின் பெருமையுணர்ந்தவாற்றால், தமது சிறுமை தெளிந்தவர். தம் சிறுமை அறிந்து இறைவனின் பெருமையுணர்ந்தவர். "பணியுமாம் என்றும் பெருமை" என்பதற்கு மாணிக்கவாசகரே சிறந்த எடுத்துக்காட்டாக இலங்குகின்றார். தாழ்வெனும் தன்மை தோன்ற அவர், தம்மை எங்ஙனமெல்லாம் இழித்துரைத்துப் பழித்துக் கொள்கின்றார் என்பதனை ஆராய்ந்தறிதலும், நாம் அவர்தம் பெருமையினை யுணர்தற்கு ஒரு நல்ல வாயிலாகும்.

1. பொல்லா வினையேன். 2. நலந்தான் இலாத சிறியேன். 3. நாயிற் கடையாய்க் கிடந்த அடியேன். 4. யாவரினும் கடையனாய நாயினேன். 5. இரண்டு மிலித் தனியனேன். 6. எட்டினோடு இரண்டும் அறியேன். 7. யாதும் ஒன்றல்லாப் பொல்லா நாயான நீசனேன். 8. ஊர் நாயிற் கடையானேன். 9. நெஞ்சு உருகாதேன். 10. கல்லா (ம்) மனத்தேன். 11. பொல்லா நாயான புன்மையேன். 12. இருப்பு நெஞ்ச வஞ்சனேன். 13. வஞ்சகப் பெரும் புலையனேன். 14. பிழையே பெருக்கிச் சுருக்கும் அன்பின்வெற்றடியேன். 15. கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேன். 16. ஏழைத் தொழும்பனேன் 17. பொல்லாக் கல்வி ஞானமிலா அழுக்கு மனத்தடியேன். 18. கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேன். 19. பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும் புழுத்தலைப் புலையனேன். 20. மண்ணிலே பிறந்து மண் ஆவதற்கு ஒருப்படுகின்றேன்.

தாழ்வெனும் தன்மை தோன்ற இத்தகைய பலப்பல சொற்றொடர்கள், திருவாசகத்துள் ஆங்காங்கு மிக்கு விரவி நிரம்பிக் காணப்படுகின்றன. தம்மைப் பழித்துரைத்துக் கொள்ளுதலில்தான், மாணிக்கவாசகர்க்கு எத்துணை ஆர்வம்! தம்முடைய புலமை நலனையும், சொல்லாட்சித் திறனையுமெல்லாம், தம்மைத் தாமே தாக்கிப் பழித்துரைத்துக் கொள்ளுதலில் அன்றோ, அவர் பெரிதும் விரும்பிப் பயன்படுத்திக் கொண்டுள்ளார். அவர் தம்மைப் பழித்துக் கொள்ளுதற்காகப் புதிய, புதிய சொற்களையும், வெவ்வேறு வகையான சொற்றொடர்கள் பலப்பலவற்றையும் வழங்கியருளியுள்ள திறம் மிக்க இலக்கிய நயமும், சிறந்த கவிதைத்திறனும் வாய்ந்து, நம்மை வியப்பிடை வீழ்த்தி நமக்குக் களிப்பை விளைவிக்கின்றன.

## பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடர் :

திருவாசகம் பொய்ம்மையைக் களைந்து மெய்ம்மையை விழைந்து நிற்கும் ஒரு சிறந்த பக்தி ஞானப்பனுவலாகும். பொய்ம் மையை விரும்புபவரும், மெய்ம்மையை வெறுப்பவரும் இவ்வுலகில் எவரும் இலர். "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம் பிற செய்யாமை செய்யாமை நன்று" எனவும், "யாம் மெய்யாக் கண்ட வற்றுள் இல்லை எனைத்தொன்றும் வாய்மையின் நல்ல பிற" என்றும் திருவள்ளுவர் கூறுவர். "பொய்தீர் ஒழுக்கநெறி" என்று அவரே பிறிதோர் இடத்தில் கூறுதலால், பொய்ம்மை தீர்ந்ததே ஒழுக்க நெறியாதல் பெறப்படும். நாம் எல்லாரும் நம் அறிவும் உளமும் ஒருவழி ஈர்ப்ப, ஐம்பொறியும் புலன்களும் பிறவும் பிறிதொரு வழியில் ஈர்ப்ப, இடையே நின்று செயலற்று வருந்தித் திகைத்துப் பெரும்பாலும் பொய் வாழ்க்கையே வாழ்ந்து வருகின்றோம். நம் உள்ளம் நினைப்பது ஒன்றும் வாய் பேசுவது பிறிதொன்றும், உடல் செய்வது வேறொன்றுமாகவே பெரும்பாலும் இருக்க, நம் வாழ்க்கையினை எங்ஙனமோ ஒருவாறு நாம் கழித்துக் கொண்டிருக்கின்றோம். இத்தகைய பொய் வாழ்க்கையின் நீங்கி, மெய் வாழ்க்கையின் மேனி மிளிர்தல் வேண்டும் என்றே, திருவாசகம் அலறிக் கதறி ஆண்டவனை வேண்டுகின்றது.

1. பொய்யாயின எல்லாம் போய் அகல வந்தருளி 2. விச்சுக் கேடு பொய்க்கு ஆகாது என்று இங்கு எனை வைத்தாய் 3. யானே பொய், என் நெஞ்சும் பொய்; என் அன்பும் பொய் 4. பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை யுண்மையேன் 5. பொய்யவனேனைப் பொருள் என ஆண்டு ஒன்று பொத்திக்கொண்ட மெய்யவனே 6. பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே 7. மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே

– என்பன முதலாகப் பலப்பல குறிப்புகள், திருவாசகத்துப் போதருதல் காணலாம். மாணிக்கவாசகர்க்குப் பொய்ம்மையின் பால் உள்ள வெறுப்பும், மெய்ம்மையின்பால் உள்ள விருப்பும் இவற்றால் நன்கினிது புலனாகின்றன. தம்மாட்டுள்ள பொய்ம்மை

கள் ஒழிந்து, தாம் மெய்ம்மை நிலையின் மேனி வீறுற்று விளங்கு வதற்கு அருள் செய்தல் வேண்டும் என மிகவும் ஆராமையோடு, இறைவனைப் பெரிதும் வேண்டி நிற்றலைத் திருவாசகத்தின்கண் நாம் யாண்டும் காணலாம். எனவே பொய்யிருள் ஒழிந்து, மெய் யொளி அடைந்து வாழ விரும்பும் எவர்க்கும், திருவாசகம் ஒரு பெருந்துணையாகும் என்பதில் ஐயமில்லை.

## மகளிர் விளையாடல்கள் :

இனி இவற்றினையெல்லாம் விடத் திருவாசகத்தின் சிறப் பியல்புகளுள் முதன்மை மிக்கதாகக் குறிப்பிடற்பாலது ஒன்றுண்டு. அதுதான் யாதெனில் இளமகளிர்கள் தம்முள் ஒன்றுகூடி விளையாடி மகிழும் அரிய நல்லமுறையில் அமைந்து திருவெம்பாவை, திருவம் மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தி, திருத்தோள்நோக்கம், திருப் பொன்னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து முதலிய திருப்பதிகங்கள் அருளிச் செய்யப் பெற்றிருத்தலேயாகும். சமணர்களும் பௌத்தர் களும் பெரும்பாலும் பெண்மையை, இகழ்ந்து பழித்து வந்த கால நிலையில், இங்ஙனம் மாணிக்கவாசகர் பெண்மைக்கு முதன்மை கொடுத்துப் பல திருப்பதிகங்கள் பாடியருளியமை வியந்து பாராட்டு தற்குரியது.

பெண்மை இயல்பினை உள்ளபடி அறிதலும், பெண்மைப் பண்பு நலங்களைச் சிறப்புற விளக்குதலும், எளிய செயல் அன்று. ஆல்ஃபிரட் ஆர்பேஜ் (Alfred Horbage) என்னும் அறிஞர் தாம் ''அவர்கள் விரும்பியது போல'' (As you like It) என்னும் நூலிற் பின்வரும் புள்ளி விவரம் ஒன்று தந்துள்ளார். ''ஷேக்ஸ்பியர் தம்முடைய 38 நாடக நூல்களில், 1217 பண்புப் படைப்புக்களை (Characters) உருவாக்கியுள்ளார். அவற்றில் 775 படைப்புகளே பெயரிடப்பெற்றுள்ளன; அவற்றுள்ளும் 157 மட்டுமே பெண்மைப் படைப்புக்களாக உள்ளன'' என்கிறார். இவ்வாற்றால் பெண்மை இயல்பினை விளக்குதல் எத்துணைக் கடினம் என்பது விளங்கும். இம்முறையில் நோக்கினாலும், ஒருவகையில் நம் திருவாசகப் பதிகங்கள் பல, பெண்மைப் பண்பு நலங்களைச் சிறப்புற எடுத்து விளக்கும் பெற்றியிலும் சிறந்து திகழ்தல் காணலாம்.

சிறு மகாஅர்கட்கு விளையாட்டு முறையின் வைத்தே கல்வி பயிற்றுதல் வேண்டும் (Play-way Method) எனக்கட்டுரைக்கும் நல்லறிஞர் பலரும், மணிவாசகர் இங்ஙனம் மகளிர் விளையாட்டின் கண் வைத்து அரிய பெரிய மெய்ப்பொருட் கருத்துக்களை நம்ம னோர்க்கு மிக எளிய முறையிற் கூறிக் கற்பித்துச் சென்றிருக்கும் திறம் நினைத்து வியவாதிரார்.

மணிவாசகர் மிகச்சிறந்த பெரும்புலவராயினும், சங்ககாலக் கடுந்தமிழ்நடையில் தம் கவிதைகளை அருளிச் செய்யாமல், இக் கால நாட்டுமக்கட் பாடல்கள்போல, எளிய இனிய சிறந்த நடையில், இளமகளிர் விளையாடல்களில் வைத்துப் பாடியருளியிருக்கும் திறம், பெரிதும் மகிழ்ந்து பாராட்டுதற்குரியதாகும்.

மேலும் இவைகள் வெறும் பதிகங்களாக இல்லாமல், வெவ்வேறு வகையான அமைப்பும் இலக்கணமும் உடைய அழகிய சிறுசிறு தனித்தனிப் பிரபந்தங்களின் நிலையில் அமைக்கப்பட்டிருத்தலும், எண்ணியுணர்ந்து இன்புறுதற்குரியதாகும். பிற்காலத்தில்தோன்றிய பலவகைப் பிரபந்தங்களுக்கு இவைகளே அடிப்படையாக அமைந்து வழிவகுத்துக் கொடுத்துள்ளன. இவ்வாற்றால் சமயத்துறையில் மட்டுமேயன்றி, இலக்கியம் மொழி கலை பண்பாடு முதலிய பல துறைகளிலும் கூட மணிவாசகர் அருளிய திருவாசகம், ஒப்புயர் வற்ற பெருஞ் சிறப்புடையதாக, வீறுற்றொளிர்ந்து விளங்குகின்றது.

## திருவாசகமும் பழமொழிகளும் :

ஒரு மொழிக்கு அழகும் ஆற்றலும் வலிவும் அளிக்கவல்ல செல்வமாவன பலவற்றுள் அம்மொழிக்கண் வழங்கும் பழமொழிகள் மிகவும் சிறப்புடையனவாகும். பழமொழிகளை அறிவுத் துணுக்கு கள் எனலாம். பழமொழிகள் என்பன நம்முன்னோர்கள் தம் வாழ்க் கையிற் பலகால் கண்டுணர்ந்து தெளிந்த அனுபவ உண்மைகளைப் பின்னோர்க்குப் பயன்பட நன்கு இனிது தொகுத்து வைத்துச் செல்லும் அறிவுப் பெட்டகங்கள் போல்வனவாம். அறிஞர்கள் பலர் கூடி ஆராய்ந்து விவாதித்து முடிவு செய்து உணர்த்தத்தகும் அரிய பல உண்மைகளை, எளிதில் தெள்ளென விளக்குவன

பழமொழிகளே. காலத்தின் இலச்சினையும், பலகோடி மக்களின் ஒப்புதலும் போற்றுதலும் பெற்று, வழிவழியே தொடர்ந்து பலப்பல நூற்றாண்டுகளாக நிலவி நின்றுலவி வழங்கிவரும் பழமொழிகளின் அறிவனுபவ நலங்கள், பெரிதும் மதிக்கற்பாலனவாகும்.

பழமொழிகள் அறிவின் இலக்கியங்கள் எனத் தக்கவை. அவைகள் உயர்ந்த உண்மைகளை உள்ளுறையாகக் கொண்டு ஒளிர்கின்றன. ஒவ்வொரு நாட்டிற்கும் உரிய நூல்களைப்போல, ஒவ்வொரு நாட்டின் பழக்க வழக்கப் பண்பாடுகளின் புனிதப் பாதுகாப்பு நிலையமாகத் திகழ்வன பழமொழிகளே.[2]

ஒருநாட்டின் அறிவுத் திறன், நுண்ணுணர்வு, இயல்புணர்ச்சி ஆகியவைகள், அந்நாட்டுப் பழமொழிகளின் மூலம் வெளிப் படுகின்றன.[3]

எளிய சொற்கள், குறுகிய நீதிகள், அனுபவ உண்மைகள், பழைய வழக்காறுகள் என்பனவே, ஓராற்றால் உலகத்தினைத் தலைவர்கள்போல் இயக்கி வருகின்றன. ஒருதனி மனிதனுடையவும், ஒரு நாட்டினுடையவும் பண்பாடுகளை உருவாக்கி, நடைமுறை களை வகுத்து இயங்கச் செய்யும் சிறந்த பேராற்றல், பழமொழி களுக்குள்ளேயே மறைந்து கிடக்கின்றன.

சமுதாயத்தில் நிகழும் பெரிய சீர்திருத்தங்கள், பெரிய புரட்சிகள், மனித வாழ்வில் ஏற்படும் முன்னேற்றங்கள், வளர்ச்சிகள் என்பன பலவும், பொருத்தமான சூழ்நிலையில் வெளியிடப்பெறும் நல்ல சொற்கள் – திருந்திய சொற்கள் – ஆற்றல் மிக்க சொற்களின் வாயிலாகவே தொடக்கம் கொள்கின்றன. பறவைகள் தம்சேக்கை களிற் சென்று சேர்ந்து வருவது போல, அச்சொற்களும் மனித உள்ளங்களில் எளிதில் இனிது நுழைந்து நிறைபெற்று விடுகின்றன.[4]

1. இல்நுழை கதிரின் துன்அணுப்புரைய. 2. பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து. 3. நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும். 4. பிறிவினை அறியா நிழலது போல. 5. கற்றா மனம் எனக் கதறியும் பதறியும். 6. ஊற்று மணற்போல் நெக்கு நெக்குருகி. 7. தடக்கையின் நெல்லிக்கனி எனக்காயினன், 8. தழலது கண்ட

மெழுகதுபோல. 9. கொடிறும் பேதையும் கொண்டது விடாது. 10. பசுமரத்தாணி அறைந்தாற்போல. 11. கண்டும் கண்டிலேன் என்ன கண்மாயமே. 12. ஊராமிலைக்கக் குருட்டா மிலைத்தாங்கு. 13. பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடமை· 14. விச்சுக்கேடு பொய்க்காகா தென்றிங்கெனை வைத்தாய். 15. மழக்கை இலங்கு பொற்கிண்ணம். 16. தாம் வளர்த்ததோர் நச்சுமாமரமாயினும் கொலார். 17. ஆற்றங்கரை மரமாய் வேருறு வேன். 18. இருதலைக் கொள்ளியினுள் எறும்பொத்து 19. கடலினுள் நாய் நக்கியாங்கு. 20. வெள்ளத்துள் நாவற்றியாங்கு. 21. இருந்தென்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை. 22. கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன். 23. எறும்பிடை நாங்கூழ்என. 24. மெய்க்கும் நெய்க்குடந்தன்னை எறும்பென. 25. பெருநீர் அறச்சிறுமீன் துவண்டாங்கு. 26. பொதும்புறு தீப்போல். 27. பலாப் பழத்து ஈயின் ஒப்பாய். 28. உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம். 29. பேய்த்தேர் முகக்குறும் பேதை குணம். 30. பிரைசேர் பாலில் நெய்போல. 31. இரைதேர் கொக் கொத்து. 32. நரிப்பாய் நாயேன் இருப்பேனோ? 33. பாவிடையாடு குழல்போல் கரந்து பரந்தது உள்ளம். 34. புளியம்பழம் ஒத்திருந்தேன். 35. பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேன். 36. நுகமின்றி விளாக்கைத்து. 37. கீழ்ச்செய்தவத்தாற் கிழியீடு நேர்பட்டு. 38. பிழைத்தால் பொறுக்கவேண்டாவோ? 39. அழைத்தால் அருளாது ஒழிவதே? 40. திகைத்தால் தேற்ற வேண்டாவோ? 41. சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ. 42. பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றே...

மாணிக்கவாசகர், உலகியலும் அருளியலும் ஒரு சேர "உண்மையான் உணர்ந்தோர்" ஆதலின், தாம் அருளியலைப் பாடுங்காலும் உலகியலினராகிய நம்மனோர் பொருட்டுப் பலதிற உலகியற் பழமொழிகளை உடன்தழீஇ ஒருங்கியைத்து, இடை யிடையே விராஅய்ப் பாடியிருத்தலும், அங்ஙனம் பாடினராயினும் அவை தம்மைக் கொச்சைமை சிறிதும் இல்லாப் பெற்றிமையிற் செய்யுள் வழக்கிற்கியையுமாறு மாட்சிமைப்பட வைத்து வழங்கி யிருத்தலும், நம்மனோரை மிகவும் அகமகிழச் செய்கின்றன.

திருவாசகம் தோன்றிய காலந்தொட்டு அதனைப் போற்றாத சான்றோர் பெருமக்கள் இல்லை. இராமலிங்கஅடிகள், துறைமங்கலம் சிவப்பிரகாசர், குமரகுருபர சுவாமிகள், சிவஞான சுவாமிகள், தாயுமானவர், பட்டினத்தார், கல்லாடர் முதலிய எண்ணிறந்த பல பெருஞ் சான்றோர்கள் திருவாசகத்தினைத் தம் உயிரினும் இனிய விழுமிய நூலாக வழிவழியே போற்றி வந்திருக்கின்றனர்.

"மாணிக்கவாசகராகிய மேகம், சிவபெருமான் ஆகிய கருணைக் கடலில் முகந்து, அருள் என்ற பெருமழையைப் பொழிந்தது. அம் மழை, திருவாசகம் என்னும் பக்தி வெள்ளமாகப் பெருகுகிறது. அத் திருவாசகமாகிய பக்தி அருள் வெள்ளம், ஓதுபவர்களின் உள்ளமாகிய குளத்தில் புகுந்து, நாக்கு என்னும் மதகில் நடந்து, கேட்பவர்களின் செவியாகிய மடையில் புகுந்து, உணர்வு என்னும் வயலில், அன்பாகிய விதையிலிருந்து, சிவம் என்னும் மெல்லிய நல்ல முளையைத் தோற்றுவிக்கும். அம்முளையில் இருந்து கருணை மலரவும், முக்தி என்னும் வீடுபேறாகிய சிறந்த பயன் விளையவும் செய்யும்". இத்தகைய பெருமாட்சிமை வாய்ந்தது திருவாசகம் என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாசகத்தின் சிறப்பினை மிகவும் புகழ்ந்து போற்றி அருள்கின்றார்.

"பொருள் பொதிந்த கருத்துக்களிலும், மன உணர்ச்சிகளை வெளியிடும் இயல்புண்மைத் திறனிலும், அயரா அன்பு கெழுமிய கள்ளமற்ற குழந்தைமை உள்ளத்திலும், திருவாசகத்திற் சிறந்த பிறிதொரு நூல் உலகில் வேறு எம்மொழியிலும் இல்லை. அறிவு ஆராய்ச்சிக் குழப்பங்களும், ஒழுக்க இழுக்கக் குறை நிறைகளுமாகிய சுமைகள் இடைவிடாது அழுத்தித் துயர் செய்வதால் தடுமாறி நிற்கும் உயிர்கள், கடைசியாகத் தாம் துன்பம் நீங்கி இன்பம் ஓங்க அடையத்தகும் அரணாகத் திருவாசகம் திகழ்கின்றது"[5] என்று பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை அவர்கள் தாம் இயற்றிய "திருஞானசம்பந்தர் கால நிர்ணயம்" என்னும் ஆங்கில நூலில் திருவாசகத்தினை மிகவும் வியந்து புகழ்கின்றார்.

திருவாசகமானது, அழகிய இனிய பால்களில், அறியாமை பேரவா முதலிய அடிமைத் தளைகளினின்று விடுபட்டு அன்பு அறிவு

என்பனவற்றின் உரிமை பெற்று, முறை முறையே வளர்ந்து வெல்லும் ஓர் உயிரின் முன்னேற்றப் படிநிலைகளை நன்கினிது விளங்கக் காட்டுகின்றது. உயிரின்கண் முதன்முதலாக உணர்வுக் கண்கள் திறக்கப்பெறுதல் அதனாற் பிறக்கும் உவகை பெருமிதம் பலவகை மனநிலை அலைவுகள், கையறவு, உலகியலில் நின்று தடுமாறும் போராட்டம், அமைதியின்மை, இறுதியாக இறைவனை அடைந்து எய்தும் அமைதி, அவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் பெருமகிழ்ச்சி யுணர்வு என்னும் பலதிற உணர்ச்சிகளும், திருவாசகத்தின்கண் பளிங்கெனப் பெரிதும் பொலிந்து விளங்கு கின்றன" [6] என்று திருவாசகத்தினைப் பேரறிஞர் போப்துரைமகனார் அவர்கள் புகழ்ந்துரைத்துப் பாராட்டுகின்றார்.

தமிழ் இலக்கியங்களில் தலைசிறந்ததாய் இறையருள் இன்ப அனுபவ நலத்தின் மிகச் சிறந்த-மிக உயர்ந்த வெளிப்பாடாய், அரும்பெறற் கவிதை அமிழ்த இன்ப நூலாகத் திருவாசகம் மிளிர் கின்றது. கெத்தே என்னும் ஜெர்மானிய நாட்டுக் கவிஞர், காளிதாசர் இயற்றிய 'சாகுந்தலம்' என்னும் நாடகத்தினை, விண்ணிலும் மண்ணிலும் விளங்கும் நலங்கள் எல்லாம் ஒருங்கு இணைந்து சிறந்து விளங்குவது என்று வியந்து புகழ்ந்தார். அம்முறையில் நாமும் திருவாசகத்தைப் புகழ்ந்து போற்றிப் பெருமிதம் கொண்டு மகிழ்தல் கூடும்.

## திருவாசகத்தேன் :

மாணிக்கவாசகர், சிவபெருமானைத் 'தேன்' என்று கண்டு உணர்ந்து தெளிந்தவர். சிவபெருமான் அவருக்குத் தேனாய் இன்னமுதமுமாய்த் தித்தித்தான். ஆதலின் மாணிக்கவாசகர் சிவபெருமானை "அந்த இடைமருதில் ஆனந்தத்தேன்" என்றே பெயரமைத்துக் குறிப்பிடுவார். சிவபெருமானாகியதேனை ஆரப் பருகி உண்ட மாணிக்கவாசகர் தாம் அருளிய திருவாசகத்தில் ஆங்காங்கே சிவபிரானையும் அவனது திருவருளையும் 'தேன்' என்றே சிறப்பித்து வழங்கியருள்கின்றார்.

1. சிறந்தடியார் சிந்தனையுள் தேன் ஊறி நின்று 2. தேசனே தேன் ஆர் அமுதே 3. கருணை வான்தேன் 4. தேன் நிலாவிய திருவருள் 5. தேனே அமுதே கரும்பின் தெளிவே 6. தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை 7. தேனே அமுதே கரும்பின் தெளிவே 8. தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து 9. தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய் 10. தேனார் கமலமே சென்றூதாய் 11. தேன்புரையும் சிந்தையராய் 12. கண்ணகத்தே நின்று களிதருதேனே 13. தழங்கருந்தேன் அன்ன தண்ணீர் பருகத் தந்துய்யக் கொள்ளாய் 14. தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் 15. சிவன் கருணைத் தேன்பருகி –

இங்ஙனம், இறைவனையும், அவனது அருளின் திறனையும், மணிவாசகர் ஆங்காங்கே தேன் எனவே பலகாலும் திருவாசகத்தின் கண் சிறப்பித்துக் குறிப்பிடுதலின், அதனை ஓதி உணர்ந்து உவந்த சான்றோர்கள் அனைவரும், திருவாசகத்தினையே தேன் என்று குறிப்பிட்டுப் பாராட்டிச் சிறப்பிப்பாராயினர்.

> தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
> அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை
> மருவா நெறியளிக்கும் வாதவூர் எம்கோன்
> திருவா சகம்என்னும் தேன்.

உடற்பிணிகள் பலப்பல போக்கி, நமக்கு நலங்கள் புலப்பல விளைவிப்பது தேன்; அதுபோல, நம் உயிர்ப் பிணிகள் பலவற்றையும் போக்கி, நமக்கு இறையருள் நலம் கிடைக்கத் துணை புரிவது திருவாசகம் என்னும் தேன்.

இறைவனின் திருவடிகள் தாமரை மலர்! அவற்றில் இடையறாது ஈடுபட்டு இறைஞ்சி வழுத்திய மணிவாசகர், அத் தாமரை மலர்களில் படிந்த வண்டு. அவர்தம் இன்னிசைத் துதியே வண்டின் மிழற்சி. இறைவனின் திருவடிகளில் ஈடுபட்டு, மணிவாசகர் நுகர்ந்த இன்பமே தேன். மணிவாசகராகிய வண்டு இறைவனின் திருவடியாகிய தாமரை மலரிற் படிந்து, நுகர்ந்த இன்பமாகிய தேனை, அனைவரும் இனிது உண்டு உவந்து உய்தி பெறும்படி

ஒருங்கே திரட்டிவைத்த பெரும் தேன்கூடு போல்வதே திருவாசகச் செந்தமிழ்த் தெய்வமாமறை என்று, நாம் சுருங்கக் கூறிக் குறிப்பிடுதல் பொருந்தும்.

> தினைத்தனை உள்ளதோர் பூவினில் தேனுண்ணாதே
> நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
> அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
> குனிப்பு உடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்று மணிவாசகர் இறைவனைப் பற்றிப் பாடுவது போலவே, திருவாசகமும் நாம் நினைத்தொறும், பேசுந்தொறும் ஓதுந்தொறும், நம் உள்ளத்தில் ஆனந்தத்தேன் சொரியும் அளவிலாப் பெருஞ் சிறப்பு உடையதாகும்.

## முடிவுரை :

மாணிக்கவாசகர், தம் திருவாசகத்தில் திருவெம்பாவையில் "சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை?" என்று வினவியருள்கின்றார். உடலழகு அல்லது உருவ அழகு உடையவர்களை மட்டுமே, நாம் கண்டும் கேட்டும் இருக்கின்றோம். ஆனால் மாணிக்கவாசகரோ, "சித்தம்அழகியார்" என்று சிலரைக் குறிப்பிட்டு வியந்து புகழ்கின்றார். திருவாசகச் செந்தமிழ்த் தெய்விக மாமறையினை முறையாக அன்புடன் நாளும் ஓதி வருபவர், எவராயினும், அவர்களெல்லாம் தம் உள்ளமும் உயிரும் தூய்மையும் அழகும் உற்று, "சித்தம் அழகியார்" எனப்பெறும் சிறந்த மேலான நிலையைப் பெறுவர் என்பது திண்ணம். சித்த சுத்தியாகிய அழகும், ஆன்மலாபமும் பெறுவதற்குத் திருவாசகம் நம்மனோர்க்குப் பெருந்துணை புரியும். ஆதலின் நம்மனோர் அனைவரும், திருவாசகத் தேனை நிரம்ப ஓதிப் பருகி, மும்மை மலப்பிணிகள் நீங்கிச் செம்மை நலம் பெற்றுச் சிவபெருமான் திருவருளை எய்தி, உய்ய முயல்வோமாக!



# 2

# திருவாசகத்தின் இலக்கியத் திறன்

## நன்றியுரை

'மனிதர் தம்மில் தலையாய
மனிதர்' என்னும் சிறப்புடைய
இனிய நல்ல பெருந்தகையார்,
இராய சொக்க லிங்கனார்
நினைவில், திருவா சகம்பற்றிச்
சொற்பொ ழிவுகள் நிகழ்த்துதற்கு
நனிநல் வாய்ப்பு வழங்கியருள்
நல்லோர் பலர்க்கும், என்நன்றி!

கண்ணார் தமிழும் சிவநெறியும்
தழைத்து வளரப் பணிபுரிந்த
எண்ணார் சிறப்பின் தமிழ்க்கடலார்,
இராய. சொ.வின் நினைவாகப்
பண்ணார் திருவா சகம்பற்றிப்
பேசப் பணித்திங் கெனையழைத்த,
அண்ணா மலைப்பல் கலைக்கழகம்
வாழி அளவில் பல்லூழி!

ந. ரா. முருகவேள்

## முன்னுரை :

தமிழ் இலக்கியங்களுள், திருவாசகத்திற்குத் தனிப்பெருஞ் சிறப்பிடம் உண்டு. திருவாசகத்தின் இலக்கியத்திறனை ஆராய்ந்து உணர்ந்து அளந்து அறிந்து கொள்வதற்கு முன்னர், இலக்கியம் என்பது யாது? அதற்குரிய இலக்கணங்கள் யாவை? என்பது பற்றி ஒரு சிறிது கருதியுணர்தல், நமக்கு இன்றியமையாததாக உள்ளது. இறைவனின் இயல்புகள் பற்றி எங்ஙனம் நாம் வரையறுத்துக் கூறுதல் இயலாதோ, அதுபோலவே இன்னதுதான் இலக்கியம் என்று வரையறை செய்து வகுத்துக் கூறுவதும், நம்மனோர்க்கு ஒருவகையில் அரியதொரு செயலேயாகும்.

## இலக்கிய நலக் கூறுகள் :

ஒரு சிறந்த இலக்கியமானது தன்னைப் பயில்பவர்களின் அறிவை வளர்ந்தோங்கச் செய்தல் வேண்டும். தான்கூறும் கருத்துக் களைப் பயில்பவரின் உள்ளத்தில் நன்கினிது அழுந்திப் பதியுமாறு உணர்ச்சி மிக்க முறையில், வெளியிடுதல் வேண்டும். கருத்துக் களை வறிதே வெற்றெனத் தொடுத்துச் செல்லாமல், சுவை பெருகும் படி அழகிய கற்பனைத் திறங்கள் அமையும்வண்ணம் விளக்குதல் வேண்டும். அங்ஙனம் விளக்குங்கால், இலக்கியங்களின் சொல்லிலும் பொருளிலும் அமைப்பிலும் வடிவிலும் ஒரு சிறந்த கலைத்திறன் இயல்பாகப் பொருந்தி விளங்குதல் வேண்டும். இவ்வகையில் சிறந்த இலக்கியங்களில் அறிவுநலக்கூறு (Intellectual Element), உணர்ச்சிநலக்கூறு (Emotional Element), கற்பனைநலக்கூறு (Imaginative Element), கலைநலக்கூறு (Technical Element) என்னும் நான்கும் நல்லமுறையில் அமைந்திருத்தல் வேண்டும் என்பது மேலைநாட்டுத் திறனாய்வாளர்களின் கருத்து. நம் தமிழகத்துச் சான்றோர்களின் திருவுள்ளப்படி, இந்நான்கு கூறுகள் மட்டுமேயன்றி, இனிய சிறந்த நல்ல இலக்கியங்களில், தெய்விக நலம் (Element of Sublimity) என்னும் ஒரு பெருஞ் சிறப்பியற் கூறும் அமைந்திருத்தல் வேண்டும். இந்த ஐந்து வகையான கூறுகளும் நன்கினிது அமையப் பெற்றதே ஒப்புயர்வற்ற சிறந்த இலக்கியமாகும்.

"ஓங்கும் அறிவுநலம், உற்ற உணர்ச்சிநலம்,
பாங்குமிகு கற்பனைப் பண்புநலம், - தேங்கிமிளிர்
செம்மைக் கலைநலம், தெய்வநலம் சேர்ந்திடில், ஆம்
மெய்ம்மை இலக்கியநல் வீறு" – ந. ரா. மு.

## தெய்விக நலம் :

"தெய்விக நலம் என்பது ஐந்து ஊற்றுக்களினின்று பொங்கி எழுகின்றது. அவற்றுள் முதலாவதும் மிக முக்கியமானதும், கருத்துக்களைத் தெளிவுற அறுதியிட்டு உறுதியுடன் தெரிந்து புரிந்து கொள்ளுதலாகும். இரண்டாவது, ஆற்றல்மிக்க உள்ளெழுச்சி உணர்ச்சியாகும். கவிதைச் சிறப்புக்குரிய இவ்விரண்டும், பெரும் பாலும் கருவிலேயே திருவாக அமையத் தக்கன எனலாம். இனி ஏனையன மூன்றும் கலையியற்பாற் பட்டன. மூன்றாவது ஊற்றானது, கருத்துக்கள் இனிய எழில்வடிவம் கொள்ளுதலாகும். அது கருத்துக்களைப் பற்றியனவும், அவற்றை வெளிப்படுத்தும் சொற்களைப் பற்றியனவும் என இரண்டு வகைப்படும். அடுத்து நான்காம் ஊற்று, குறிப்பிடத்தக்க மொழிநடைபற்றியது. சொற் களைத் தேர்ந்து அமைத்தல், கருத்துக்களுக்குக் கவர்ச்சி மிக்க வடிவம் கொடுத்தல், கவிஞனின் தனியியல்பைப் புலப்படுத்தும் சொல்நடை அமைப்பு என்பவை, இதனைச் சார்ந்தன. இங்ஙனம் மேற்குறித்த நான்கினையும் ஒருங்கிணைத்து இயைத்துப் பொருத்த மான சிறந்த கட்டுக்கோப்புடன் விளங்கும்படி செய்வது, ஐந்தாம் ஊற்று ஆகும்". இவ்வாறு லாங்கினஸ் (Prof. Longinus) என்னும் இலக்கியத் திறனாய்வாளர் செவ்விதின் விளக்குகின்றார்.

"தெய்வநலம் ஐந்தூற்றாற் சிறந்தெழும்;
கருத்துணர்ந்து தெளிந்து தேர்தல்;
தொய்வில்பெரும் உணர்வாற்றல்; சூழ்கருத்திற்கு
உருவொடுசொல் தோற்று வித்தல்;
செய்யநற்சொல் கவையினொடு சிறந்ததனி
இயலமைப்பு; சேர்த்தி வற்றை
மெய்யிணைத்துப் பிணைக்கும்நலம்; இவை ஐந்தும்
தெய்வநலம் விளங்கச் செய்யும்" [1] – ந. ரா. மு.

(1) – The sublime rises from five fountains. The first and most important is the firm grasp of ideas. The second is vigorous

இவ்வடிப்படையைக் கொண்டு ஆழ்ந்து நுணுகி ஆராய்ந்து காண்போமாயின், தெளிவுமிக்க உறுதிப்பாடு, ஆற்றல் மிக்க உள்ளெழுச்சி உணர்ச்சி, கருத்துக்களின் எழில்வடிவ அமைப்பு, அவற்றை வெளிப்படுத்தும் சொற்பொருள் நுணுக்கங்கள், கவிஞனுக்கே உரிய தனிப்பெருஞ் சிறப்பியல்புகள் ஆகியவை திருவாசகத்தின்கண் அமைந்து விளங்கி, அதனது ஒப்புயர்வற்ற இலக்கியத் திறனைப் புலப்படுத்துதல் காணலாம்.

## இலங்குநூல் :

ஒரு நூலை நாம் அஃது இலக்கியமா? அல்லது இலக்கியம் அன்றா? என ஆராய்ந்து முடிவுசெய்வதற்குப் பலவகை அளவுகோல்கள் உண்டு. ஒரு சிறந்த இலக்கியமானது, இன்று நாளை மாய்ந்து மறைந்தொழியும் இயல்பினதன்று. அஃது என்றென்றும் நிலை பெற்று நின்று விளங்கும் தன்மை வாய்ந்தது. ஆசிரியர் திருவள்ளுவர் "விலங்கொடு மக்கள் அனையர்; இலங்குநூல் கற்றாரோடு ஏனையவர்" என்னும் திருக்குறளில் "இலங்குநூல்" என்றது, என்றும் அழியாமல் நின்று நிலவும் சிறப்புமிக்க அரும் பெரும் இலக்கியங்களையே யாகும். சிறந்த இலக்கியங்கள் தம்முடைய பலவகை நலங்களால், "நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு" என்றபடி,

---

and inspired emotion. These two constituents of poetic excellence are for the most part inborn. The other two come from art. The third is the formation of figures, of which there are two kinds, those of ideas and those of words. Next is notable language, which has as its parts the choice of words and figurative and individual diction. The fifth, which serves to hold all the other in unison is fitting and dignified arrangement"

- *Prof. Longinus,* on the sublime.

தம்மைப் பயில்பவர்களுக்கு ஒரு சிறிதும் தெவிட்டாமல், மேலும் மேலும் சுவை பெருக்கிக் கொண்டு திகழும். தொட்டனைத்தூறும் மணற்கேணி போல, அது தம்மைப் பயில்பவர்களுக்குப் பயிலுந் தோறும் இடையறாத இன்பமும் அறிவும் விளைவிக்கும்; தம்மைப் பயில்பவர்களுக்கு மேலும் மேலும் பயிலும் ஆர்வத்தை மிகுவிக்கும்.

> நூறுமுறை படித்தாலும் தெவிட்டாமல், நுணுகித்தோய்ந்து
> ஊறிமிக மேன்மேலும் ஓதுதற்குப் பெருவிருப்பம்
> ஆறுஎனப் பெருகுறப், பல் ஆயிரங்கால் கற்கவைக்கும்
> வீறுயர் நூல் எது? அதுதான் இலக்கியமாய் விளங்குகிற்கும்[2]
>
> – ந.ரா. மு.

சிறந்த இலக்கியத்திற்குரிய இயல்பு, திருவாசகத்தின்கண் அமைந்து கிடத்தல் அனைவரும் அறிந்தது. திருவாசகத்தினை எத்தனை ஆயிரம் முறை தான் ஓதினாலும், பாராயணம் செய்தாலும், உண்மை அன்பர்களுக்கு மேலும் மேலும் அதனை ஓதுதற்கு ஊக்கமும் உள்ளக்கிளர்ச்சியும் எழுமேயன்றி, ஒருபோதும் போதுமென்ற உணர்வு ஏற்படுவதில்லை. திருவாசகத்தின் இலக்கிய நயச் சிறப்பிற்கு, இதுவும் ஒரு காரணமாகும்.

## ஓதுதொறும் உயர் அனுபவம் :

ஒரு சிறந்த இலக்கியமானது, காலத்தினால் வாடிச் சிறப்பிழந்து கழிந்தொழியாது. அதன்கண் அதற்கேயுரிய பலவேறு வகையான தனிச் சிறப்பியல்புகள் அமைந்திருக்கும் ஆதலின், அதனை எத்தனை முறை படித்தாலும் சிறிதும் சுவை குன்றவோ, தெவிட்டவோ செய்யாது. அதனைப் பயிலுந்தோறும், அஃது அறிவாகிய உணவை நமக்கு ஊட்டிக் கொண்டே இருக்கும். அங்ஙனம் அறிவு உணவை ஊட்டிக் கொண்டிருந்தாலும், அது நம் ஆர்வப் பசியைத் தணித்து விடாமல், மேலும் மேலும் வளர்த்துக் கொண்டே இருக்கும்.

---

(2) "Read it a hundred times; it will forever keep its freshness as a petal keeps its fragrance"

*Robert Frost.*

காலத்தால் வாடிக் கழியாது; பன்னலமார்
சீலத்தால் குன்றாச் சுவை திகழும் – ஏலத்தான்
ஊட்டிப் பசிபெருக்கும்; ஓங்கும் இலக்கியநன்
மாட்சிக் கிணையுண்டோ? மற்று [3] ந. ரா. மு.

எழிலும் பயனும் மிக்க சிறந்த இலக்கியத்துக்குரிய இந்த இயல்புகள் அனைத்தும், திருவாசகத்தின்கண் சிறப்புற அமைந்து விளங்குகின்றன எனத் துணிந்து கூறலாம். திருவாசகம் தோன்றி எத்துணையோ பல நூற்றாண்டுகள் ஆகியும், அதன் அருமை பெருமைகள் ஒரு சிறிதும் குறைகின்றில. அதனை எத்தனை முறை ஓதினாலும், அதன் சுவையும் இனிமையும் ஒரு சிறிதும் குறைவதில்லை.

''ஆவதென்? இதனைக் கண்டிங்
கணைதொறும் என்மேற் பாரம்
போவதொன் றுளது போலும்;
ஆசையும் பொங்கி மேன்மேல்,
மேவிய நெஞ்சும், வேறோர்
விருப்புற விரையா நிற்கும்;
தேவர்அங் கிருப்ப தெங்கே?
போகென்றார் திண்ணனார்தாம்''

– பெரியபுராணம்

என்பது போல, நாம் திருவாசகத்தினை ஓதுந்தொறும் நமக்கு ஒருவகைத் தூய்மையுணர்வும், தெய்விக இயல்பும், நம்மை அறியாமலே நமக்கு உண்டாதலை, நாம் நம் அனுபவத்திற் காணலாம். அதனை மேலும்மேலும் பல்லாயிரக்கணக்கான முறை ஓதுதல் வேண்டும் என்னும் ஆர்வமும் பக்தியுமே, நல்லோர்கள் அனைவர் உள்ளத்திலும் இயல்பாக எழுந்தோங்கி வளரக் காண்கின்றோம்.

---

(3) "Age cannot wither her; nor custom stale her
Infinite variety: Other women cloy

## சிறந்த கவிதையும், நிறைந்த பொருளும்:

ஒரு சிறந்த கவிதை அல்லது இலக்கியம் என்பது, எவருள்ளத்தையும் கவ்விக் கவர்ந்து கொள்ளை கொண்டு, இன்பம் வழங்கும் திறன் அமைந்தது. அஃது ஒப்புயர்வற்ற தூய ஞானிகளாகிய அருளாளர்களின் திருவாயினின்று மலரும்! எல்லையில்லாத நுண் மாண் நுழைபுலமும், நூற்புலமையும், இனிய உணர்ச்சிப் பெருக்கங் களும், சிறந்த கவிதையின்கண் நிறைந்து திகழும். சொற்களின் அமைப்பாலும், பொருள்களின் சிறப்பாலும், அஃது அழியா இயல் பிற்றாய், எழில்மிக்கு ஓங்கி இலங்கும். பலகால் பாடிப் படித்துப் பயின்று நினைத்து உணருந்தோறும், அதன் சுவைநலம் சிறிதும் குறையாமல் பெருகிக் கொண்டே வற்றா ஊற்றாய் வளர்ந் தோங்கிச் செல்லும். இத்தகைய ஒப்புயர்வற்ற நற்பெரும் கவிதை களைப் பாடுந் திறம், இறைவனின் திருவருட் கொடையினாலேயே அமைவதாகும்.

> "நல்ல கவிதை என்பதுதான்
> தூய ஞானச் சான்றோர்பால்,
> எல்லை யிலாநுண் நூற்புலமை,
> இனிய உணர்ச்சிப் பெருக்கதனால்,
> சொல்லிற் பொருளிற் சிறந்தோங்கி,
> நினைக்கும் தோறும் சுவைபெருகி,
> வல்ல இறைவன் அருட்கொடையாய்,
> வளங்கள் சிறப்ப மலர்ந்துநிற்கும்"

— ந.ரா. மு.

அத்தகைய இறையருட் பயனாம் பாடல்களின், அரிய பெரிய நுண்ணிய பொருள்களை ஆராய்ந்து அளந்து கூறுதல் என்பது,

---

The appetite they feed; but she makes hungry
Where most she satisfies"

Antony and Cleopatra - *William Shakespeare,*

நம்மனோர்க்கு எளிதில் இயல்வதொரு செயல் அன்று. அதன் பொருள் நலங்கள் நம் அறிவாற்றலுக்கும் தவநலத்திற்கும் ஞானத்திற்கும் ஏற்ப, எல்லையின்றிப் பரந்து விரிந்து கொண்டே செல்லும். "எல்லையற்ற பல பொருள் நுட்பக் குறிப்புக்களை உயர்த்திக் கொண்டு செல்லவல்ல தன்மையதாதலே, சிறந்த கவிதை எனத் தெளியப்படுதற்குரிய சீரிய சான்றாகும். சிறந்த நல்ல கவிதைச் செய்யுள் எதுவாயினும், அதனைச் சுற்றி அளவிடற்கரியதொரு பொருட்குறிப்புச் சூழ்நிலை மிளிர்ந்து கொண்டேயிருக்கும். கவிஞன் கருதியதும் கூறியதும் ஒரு கருத்தே யாயினும், அக்கருத்தே மிக விரிந்து பரந்து, அவன் கருதாத வேறு பல இயைபுடைய நற்கருத்துக்களையும் தன்கண் பொலியத் தோற்றுவித்துக் கொண்டு திகழும்".

"நல்லிசைக் கவிஞர், திறம்தெரிந்து ஆய்ந்து,
நயம்நனி பொருந்திட ஆளும்
சொல்லில்,நுண் பொருள்கள் துதைந்துநன் றொளிர்ந்து,
சுவைமிகப் பெருகிநின் றோங்கி,
எல்லையின் றாக எழில்மிக விரிந்தே,
இனிதுற விளங்கிடும்; அனைய
பல்பொருள் பொதுளப் பாடுமா வல்ல
பாவலர் பெருமையார் பகர்வார்?" [4]

— ந. ரா. மு.

---

(4) "The proof of the purest poetry is that its meaning is inexhaustible. About the best poetry, and not only the best, there floats an atmosphere of infinite suggestion. The poet speaks to us of one thing, but in this one thing there seems to lurk the secret of all. He said what he meant, but his meaning seems to beckon away beyond itself, or rather to expand into something boundless which is only focussed in it"

Oxford Lectures on Poetry - *Prof. A. C. Bradley*

## கவியரசரும், கவிதையரசும் :

எளிமையான நடையில், தெளிவான முறையில் இனிய சுவை மிக்க கருத்துக்கள் பொதிந்து பொதுளும்படியும், கற்பவர் உள்ளம் கவலை தவிர்ந்து களிப்புற்று நிகழும் நிலையிலும், எவரொருவர் அழகு அமையப் பாட வல்லவராகத் திகழ்கின்றாரோ, அவரே சிறந்த கவிஞர்; கவிஞர்களுக்குள்ளே தலைசிறந்த பெருங்கவியரசர் என்று போற்றத் தக்கவராவர்.

> "எவர் ஒருவர் எளியநல்ல இனிய எழிற் சொற்களினால்
> சுவைபெருகத் தெளிவுமிகத் துயர்போக்கி மகிழ்வுறுத்தி
> நவையொழிக்கும் பாடல்கள் நலம்பொதுளப் பாடுவரோ,
> அவர் கவிஞர்; கவிஞருளே அரசர்எனத் திகழ்ந்தொளிர்வர்[5]

இவ்வடிப்படையில் செவ்விதின் ஆராய்ந்து கருதினால், மாணிக்கவாசகர் ஒப்புயர்வற்ற ஒரு சிறந்த பெருங்கவியரசர்; அவர் அருளிச் செய்த திருவாசகம், ஈடும் எடுப்புமற்ற ஓர் உயரிய கவிதை யரசு எனத் தகுந்த தெய்விகப் பேரிலக்கியமாகும்.

சிறந்த இனிய கவிதைகளைத் தேர்ந்துணர்வதும், அவற்றைத் திறம் தெரிந்து சுவைத்து மகிழ்ந்து இன்புறுவதும், நாம் நம் மனித வாழ்க்கையைப் புனிதமாக்கிக் கொள்ளும் வழிகளுள் ஒன்றாகும். இயற்கைக் காட்சிகளில் காணப்படும் பலவேறு வகையான அழகின் திறங்களைக் கூர்ந்து நோக்கிச் சிந்தித்து இன்புறும் உளநலம் வாய்ந்தவர்களுக்கும்; நம்முடைய மனித வாழ்வின் மறைபொருள் நுட்பங்களை ஆழ்ந்து இனிது ஆராயும் அறிவு நிலையினருக்கும்; சமயம் தத்துவம் முதலிய உயர்ந்த புனிதமான துறைகளில் ஈடுபட்டு, உயர உயரப் பறந்து மேலெழுந்து செல்லும் ஆன்மிக நிலையின ருக்கும்; ஒழுக்கத் தூய்மையும் இறையருட் பேற்றையும் பெரிதும்

(5) "They shall be accounted poet - kings,
Who simply tell the most heart - easing things".
– John Keats.

விரும்பித்தேடி அடைய முயலும் சிறந்துயர்ந்த குறிக்கோள் கொண்டவர்களுக்கும்; ஒரு நல்ல இனிய சிறந்த கவிதையினைப் போல, நிலையான அழகுடையதாகவும் உள்ளத்தில் நன்கு பதிந்து இன்பம் விளைவிப்பதாகவும் விளங்குவது வேறு பிறிது எதுவும் இல்லை.

இயற்கைஎழிற் கின்புறுதல், வாழ்வியலை ஆய்தல்,
மயற்கையறும் மெய்யுணர்வு வானில் - உயர்ச்சியுறல்
நல்லொழுக்கில் நின்றருளை நாடல் உடையவர்கட்கு
இல்லை இலக்கியம்போல் இன்பு! [6]

அரியநல் இயற்கை அழகினை ஆராய்ந்து
அகங்களித் தின்புறு பவர்க்கும்,
இருவும்இவ் வாழ்க்கை மறைபொருள் பலவும்
மதித்துணர் அறிஞர்கள் தமக்கும்,
விரிவுறு சமய மெய்யுணர் வொளியில்
விரும்பிமேன் மேற்படர் பவர்க்கும்,
திருவருள் ஒழுக்கம் செறிந்த தூயவர்க்கும்,
சிறந்தநற் கவிதையே இன்பாம்! [6]

ந. ரா. மு.

நலஞ்சிறந்த ஓர் இனிய கவிதையானது வாழ்வியற் கவலைகளால் வருந்தி நிற்கும் மனங்களுக்கு நோய் தணிக்கும் மருந்தாகப் பயன்படுகின்றது. உலகியற் கொடுமைகளை யுணர்ந்து சில்லிட்டுப் போன உள்ளங்களுக்குத் தென்பூட்டி உணர்வளிக்கும் காலைக் கதிரவனின் ஒளிமிகுந்த கதிர்களாக விளங்குகின்றது; கொடிய பழி நெறிகளிலேயே பழகி, இழிதகவான நடத்தையே பயின்று கறை படிந்து போன இதயங்களுக்கு, அழுக்கு அகற்றும் அழகிய தெளிநீர்

(6) "To a mind brooding on the silent beauty exhibited in the varied phenomena of nature, to an intellect diving deep into the mysteries that lie in the most corners of life, to a soul soaring high into ethereal regions of religion and philosophy, to a spirit seeking serene rest in moral sanctity and Divine grace, nothing appears so permanently beautiful, so certainly impressive and effective as the study of a fine piece of poetry".

*Maraimalai Adigal*

ஓடையாகத் திகழ்கின்றது, அறிவும் ஆற்றலும் மிக்குப் பண்பட்ட தூய அகங்களுக்கு அரும்பெறல் இன்ப விருந்தாக மிளிர்கின்றது.

மனக்கவலை தீர்க்கும் மருந்தாகும்; எல்லா
தினைப்பரிய தீக்குணமும் நீக்கும் – தனக்கிணையில்
ஞாயிறாய்த் தெள்ளமிழ் வான்யாறாய்த் தேனூற்றாய்
மாவிருந்தாம் நற்கவிதை மாண்பு! [7]

ந. ரா. மு.

## இலக்கியத் திறன் :

திருவாசகம் தோன்றிய காலந்தொட்டு அதனை நம் தமிழக மக்கள் அனைவரும் ஓதி மகிழ்ந்து பயன் பெற்று வருகின்றனர் எத்துணையோ பல நூற்றாண்டுகளாகத் திருவாசகம் தமிழக மக்களால் பெரிதும் மதித்துத் துதித்துப் போற்றப்பெற்று வருகின்றது திருக்கோயில்களிலும், வீடுகளிலும், தமிழக மக்கள் அதனைப் பயின்றோதி இறைவனை வழிபட்டு வருகின்றனர். [8] வாழையடி வாழையாக வந்துள்ள நமது தமிழகச் சான்றோர்கள், தவஞானிகள்,

---

(7) "The soothing power of poetry is great and its influence on our mind is vivid and sweet. To hearts eaten away by sorrow and worldly cares, the reading of poetry comes as a healing balm; to hearts chilled by the icy hand of cruelty, it appears like the warming rays of the morning sun; and to hearts stained with the blackest crime and the basest vice, it comes as the washing water of a crystal rill. Ah! How lovely are the changes wrought by poetry in the mind of man; and how profound and permanent are the moral effects it brings into his inward nature!"

- *Maraimalai Adigal*

(8) "These poems are daily sung throughout the whole Tamil country with tears of rapture, and committed to memory in every Saiva temple by the people, amongst whom it is a traditional saying

அருளாளர்கள் ஆகிய பலரும், திருவாசகத்தின்கண் பெரிதும் ஈடுபட்டு அதனை முறையாக ஓதித்தம் பாடல்களில் அதனைப் பெரிதும் அன்புடன் எடுத்துக் கையாண்டு, போற்றிப் புகழ்ந்து பாராட்டியுள்ளனர். இவைகளெல்லாம் திருவாசகத்தின் இணையற்ற இலக்கியத் திறன்களை விளக்கப் போதியனவாகும். எனினும் அதன் அரும்பெரும் இலக்கியத் திறனைத் தெற்றென அறிந்துணர் தற்கு அதன்கண் போதரும் ஓரிரு பாடல்களில் சொற்பொருள் நுட்பங்களை மட்டுமாதல், ஈண்டு இயன்றவரை இனிது முயன்று ஆராய்ந்து காண்போம்.

மாணிக்கவாசகர், திருப்பெருந்துறையில் குருவடிவில் வந்து தம்மை ஆட்கொண்டருளிய இறைவனை "அண்டத்து அரும்பெறல் மேகன்" என்று திருவாசகத்தில், திருவண்டப்பகுதி (66–95) என்னும் அகவலில், சிறப்புறப் போற்றியுள்ளார். இறைவனை ஓர் அரும் பெறல் மேகமாக உருவகம் செய்து, முப்பத்தொரு வரிகளில், மிக விரிவாகவும், அழகாகவும், மாணிக்கவாசகர் விளக்கியருளியிருக்கும் திறம், பெரிதும் வியந்து நயந்து சுவைக்கத் தக்கதாக விளங்கு கின்றது.

> "பரமா னந்தப் பழங்கடல் அதுவே,
> கருமா முகிலில் தோன்றித்,
> திருவார் பெருந்துறை வரையில்ஏறித்
> திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய,

---

that 'he whose heart is not melted by the Thiruvasagam must have a stone for a heart'. It is impossible to read the poems without feeling that the sage of Tiru – Vathavur was a sincere seeker after God, whom, in ways that he then knew not of, he has since been permitted to know and worship. Scarcely ever has the longing of human soul for purity and peace and divine fellowship found worthier expression..."

- *Rev. Dr, G. U. Pope.*

ஐம்புலப் பந்தனை வாள்அரவு இரிய,
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப,
நீடெழில் தோன்றி வாள்ஒளி மிளிர,
எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து,
முரசு எறிந்து,
மாப்பெருங் கருணையின் முழங்கிப்,
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட,
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்,
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை
தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டம் கையற ஓங்கி,
இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை,
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்,
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன;
ஆயிடை வானப்பேர் யாற்று அகவயிற்
பாய்ந்தெழுந்து இன்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொருது அலைத்துஇடித்து,
ஊழூழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித்து எழுந்து,
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி, மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி, நிறைஅகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்,
மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி,
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்,
தொண்ட உழவர் ஆரத் தந்த,
அண்டத்து அரும்பெறல் மேகன் வாழ்க!"

## பாடலின் பொருள் :

"மிக மேலான இன்பப் பழங்கடல் ஆக விளங்கும் சிவமானது, கரிய பெரிய மேகம்போலத் தோன்றித் திருப்பெருந்துறை என்னும் மலையின்மீது ஏறி விந்துதத்துலம் ஆகிய மின்னல் ஒளியினை, எல்லாத் திசைகளிலும் பரவுமாறு செய்து, ஐம்புல அவாக்கள் ஆகிய பாம்புகள் இரியவும், உலகியல் துன்பங்களாகிய கோடைகால வெம்மை ஒழியவும், அருள் மழையினைப் பொழிந்தது.''

"மழை பொழியுங்கால், மின்னலும் இடியும் தோன்றுதல் இயல்பு. சிவம் அருள்மழை பொழியுங்கால், விந்துதத்துவம் மின்னலாக மின்னியது; நாத தத்துவம் இடியிடித்தாற்போல முழங்கியது. மின்னியும் இடித்தும் மழைபொழியும் நிலையில், இந்திர கோபப் பூச்சிகள் பரவிப் பெருகும். உயிர்களின் அளவில்லாத பிறவிகள் இந்திரகோபப் பூச்சிகள் போல மிகுந்து காணப்படுகின்றன. கார்காலத்திற்குரிய தோன்றிப் பூக்கள் மலர்வதுபோல, அச்சிவத்தின் 'அஞ்சல்' என்ற திருக்கை விளங்கியது. காந்தள் மலர்களைப்போல, அடியார்களின் கூப்பிய கைகள் திகழ்ந்தன. அருள் ஆகிய வெள்ளம் இன்பச் சுழிகளைச் சுழலவிட்டுக் கொண்டு பெருக்கெடுத்து ஓடுகின்றது".

"இவ்வருள் வெள்ளத்தின் நீரைத் தலைப்பட்டுப் பருகுதற்குத் தவப்பேறு ஒரு சற்றும் வாய்க்காத பேதை உயிர்கள் ஆகிய மான் கூட்டங்கள், பிறவித் துன்பமாகிய நீர்விடாய் மேற்கொண்டு, அறுவகைப் பொய்ச் சமயங்களாகிய கானல் நீரிலன உண்மை நீர் என்று மயங்கி, அலைந்து திரிந்து வருந்துகின்றன",

"இந்நிலையில் அருள் வெள்ளமானது பெருகுதலால், மலப் பிணிப்பு ஆகிய பந்தம் என்னும் ஆற்றின் கரைகள், இருபுறத்தும் இடிந்து சிதைந்து அழிகின்றன. இருவினைகளாகிய மாமரங்கள் வேரோடு பறித்து வீழ்த்தப்படுகின்றன. இவ்வருள் வெள்ளத்தினை அடியார்கள், தங்கள் உள்ளமாகிய பெரிய குளங்களில் நிரப்பிக் கொள்கின்றனர்".

"அங்ஙனம் நிரப்பிக் கொண்ட அடியார்களாகிய உழவர்கள், வழிபாடு என்னும் வயலில் அன்பு என்னும் விதையினை விதைத்துப் பேரின்பம் ஆகிய பயிர் விளையும்படி செய்து, சிவபோகம் என்னும் சிறந்த பயனை நிரம்பத் துய்த்து மகிழ்கின்றனர்".

"இங்ஙனம் அருச்சனையாகிய வயலில், அன்பு ஆகிய விதையை விதைத்துத் தொண்டர்கள் ஆகிய உழவர்கள், அநுபவித்து இன்புறும் படி தந்த, அண்டத்து அரும்பெறல் மேகன் ஆகிய சிவபெருமான், நீடு இனிது வாழ்க!"

என்பது மேலே குறிப்பிடப்பெற்ற திருவாசகத்துத் திருவண்டப்பகுதி வரிகளின் திரண்ட பொருள் ஆகும்.

## இலக்கியச் சுவைத்திறன் :

இவ்வினிய அழகிய பகுதியின்கண், எல்லாம் வல்ல இறைவனை அவன்றன் பேரருட்பெற்றிமை பற்றி, மேகம் என்று குறிப்பிட்டுச் சிறப்பித்து உரைக்கத் தலைப்பட்ட மாணிக்கவாசகர், அவ்வடிப் படைக் கருத்தினையே படிப்படியே தொடர்புடைய, "கடல் - மலை - மின்னல் – இடி – அரவு – கோடை – மழை – தோன்றிப்பூ – தம்பலப் பூச்சி – காந்தள்மலர் – வெள்ளம் – சுழி – கரை – மரம் – கானல்நீர் – மான்கூட்டம் – குளம் – வயல் – உழவர் – விதை – பயிர்" என்னும் பலவற்றையும், ஒரு தொடர்புபடத் தொகுத்தமைத்து வரிசையாக்கி, அவைகள் பலவற்றினையும் அழகுற இணைத்துப் பிணித்து, நீண்ட தோர் உருவகம் செய்து, இறைவனின் திருவருட் சிறப்பினை விளக்கியுள்ள திறம், அறிஞர் அனைவருக்கும் கழிபெருஞ் சுவை பயக்கும் இலக்கிய நலம் செறிந்த தொன்றாகும். திருவாசகத்தின் இலக்கியச்சுவை நலத்தின் திறத்திற்கு இஃது ஒரு சிறந்த இனிய அரும்பெறல் எடுத்துக்காட்டு எனலாம்.

## உருவகம் :

கவிஞன் தன் உள்ளத்தில் தோன்றும் நுண்ணிய கருத்துக்களை ஏனையோர் உள்ளங்களிலும் நன்கினிது பதியும்படி, ஓர் உருவம்

கொடுத்துத் திண்ணிய பொருளாக்கி, அழகும் சுவையும் அமையுமாறு வெளிப்படுத்துகின்ற ஓர் அரும்பெறல் அணியே, உருவகம் எனப்படும். கவிதைத் துறையில் உருவகம் என்னும் அணியானது, மிகவும் முதன்மையும் சிறப்பும் அருமைப்பாடும் வாய்ந்தது. அருவமாகவும் நுண்மையாகவும் திகழும் கருத்துக்களுக்கும், பண்புகளுக்கும் ஓர் அழகிய பருவடிவம் படைத்துக் கொடுத்து, அவற்றை அனைவருடைய மனக்கண்ணுக்கும் புலப்படுத்துமாறு கொணர்ந்து நிறுத்தி விளக்குவது, உருவக அணியின் சிறப்பியல்பாகும். இத்துணைச் சிறந்த உருவகங்களை, மிக்க பொருத்தமும் சிறப்பும் உடையனவாகக் கையாளும் திறன், பெரும் புலமைநலம் எய்தப் பெற்ற ஒரு சில மேதைகளுக்கே அமைந்து இயலும்.

## உருவக வகைகள் :

இத்தகைய சிறந்த புலமை நலம் கைவரப்பெறாதவர்களுக்குத் தம்முடைய கவிதைகளில் உருவகம் புணர்த்தல், எளிதில் இயல மாட்டாது. மிக முயன்று ஒரோவழி உருவகம் புனைந்தாலும், பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதைபோல, அஃது ஒன்றில் தொடங்கி, மற்றொன்றிற் சென்று, வேறு பிறிதொன்றாகி, அறவே பிழைபட்டு முடிந்தொழியும். இன்னோரனைய பிழைபட்ட உருவகங்களையே, "கலவையுருவகம்" (Mixed Metaphor) என்பர் அறிஞர்.

I smell a rat;
it is on the air;
I shall nip it in the bud

என்னும் ஆங்கில மொழிச் சொற்றொடர் போல்வன, இக்கலவை யுருவகத்திற்குப் பொருத்தமான நல்ல எடுத்துக்காட்டாகும்.

இங்ஙனம் ஒன்றில் தொடங்கி, மற்றொன்றிற்குச் சென்று, பின் வேறொன்றாக முடிந்து பிழைபட்டொழியாமல், ஒன்றோடு ஒன்று இயல்பான தொடர்பும் இயைபும் பொருந்துமாறு, திறன் தெரிந்து தேர்ந்து அமைத்தல், சிறந்த கவிஞர் பெருமக்களுக்கே செவ்விதின் வாய்க்கும். இதனை இயைபு உருவகம் என வழங்குவர்.

மேலும் இவ்வியைபு உருவகத்தினையே, அரைகுறையாகச் செய்து விடுக்காமல், முழுவதும் அமைந்து பொருந்துமாறு முற்றாக எடுத்து, நீளப் பிணைத்துத் தொடுத்து முடித்தல் என்பது, ஓர் அரிய பெரிய கலைத்திறன் என்பதில் ஐயமில்லை. இங்ஙனம், எடுத்த ஒரு கருத்தினையே படிப்படியாக வளர்த்துப் பொருத்தமுற இயைத்து, நீள நெடுகத் தொடுத்து முடிக்கும் உருவகம், முற்றுருவகம் (Sustained Metaphor) எனப்பெயர் பெறும்.

## இயைபு முற்று உருவகம் :

தனித்தனியே பல இடங்களிலும் சிதறிப் பிரிந்து கிடக்கும் பொருள்களையெல்லாம், ஒருங்கே தொகுத்துத் தொடர்புபடுத்தி, அவ் அருங்கலைத் திறத்தால், நம்மனோரின் சிந்தனையுணர்வுக்குத் தெவிட்டாத விருந்தளித்து, உவகைச்சுவையூட்டி நிற்கும் மாட்சிமை யுடையது, இயைபு முற்று உருவகம் என்னும் அணி, திருவண்டப் பகுதி என்னும் திருவாசகப் பாடலின்கண், இத்துணைச் சிறந்த இயைபு முற்றுருவக அணியானது. இணையற்ற எழில்மிக்க முறையில் அமைந்திருப்பது, திருவாசகத்தின் இலக்கியத்திறனை விளக்குவதற்குப் போதிய சான்றாகும்.

## உருவகப் பொருத்தம் :

1. மாணிக்கவாசகர் சிவபெருமானைப் "பரமானந்தப் பழங் கடல்" எனக் குறிப்பிடுகின்றார். கடல் எல்லையற்றுப் பரந்து விரிந்து விளங்குவது. இறைவனும் அத்தகையவன். உலகைச் சூழ்ந்து கிடக்கும் கடல்களின் வேறு பிரித்து, இறைவனை உணர்த்து வதற்காகப் 'பழங்கடல்' எனவும், 'பரம ஆனந்தக்கடல்' எனவும் சிறப்பித்தார்.

2. கடல் நீரே மேகமாக மாறி வருதல் போல, இறைவனே குரு வடிவத்தில் தோன்றி எருந்தருளிப் போந்த அருமைப்பாடும் சிறப்பும் விளங்க, 'அண்டத்து அரும்பெறல் மேகன்' என்றார். மழை பெய்து உலகைக் காக்கும் மேகம், அருள் சொரிந்து உயிர்களைக்

காத்து நலம் புரியும் இறைவனின் இயல்புக்கு ஒருபுடை உவமை யாகும். மேகம் போன்று வரையா வண்மையுடைய இறைவன் 'மேகன்' எனச் சிறப்பிக்கப் பெற்றான். அவனது அருமையும் பெருமையும் முறையே 'அரும்பெறல்' 'அண்டத்து' என்னும் அடை மொழிகளால் உணர்த்தப்பெற்றன.

3. மேகம் ஒரு மலையைச் சென்று சார்ந்து, அங்கே தங்கிப் படிந்து மழைபொழியும் தன்மையதாதல் போல, இறைவன் குரு வடிவம் கொண்டு, திருக்கயிலையினின்று பெயர்ந்து சிறப்புமிக்க திருப்பெருந்துறைக்குப் போந்தருளினன் ஆதலின், அத்தலத்தினை மலையாக உருவகம் செய்து 'திருவார் பெருந்துறை வரையில் ஏறி' என்றார்.

4. மேகம் மலையின்கட் சென்று தங்கி மழை பெய்யத் தலைப்படுங்கால் மின்னல் ஆகிய ஒளியைத் தோற்றுவிக்கும்; அதுபோல இறைவன் குருவடிவம் கொண்டு போந்து, தனது பேரெழில் ஒளிவடிவைக் காட்டினன் ஆகலின், அதனைத் 'திருத்தகும் மின்னொளி' என்றார்.

5. மேகத்தினின்று மழை பொழியத் தலைப்படுங்கால், மின்னலுடன் இடிமுழக்கமும் நிகழ்தல் இயற்கை. அதுபோல இறைவனின் திருவுருவக் காட்சி எய்தும் பேறுபெற்ற அடியவர் களுக்கு, அவ் இறையருளால் மணி கடல் யானை குழல் மேகம் வண்டு தும்பி வீணை பேரிகை யாழ் என்னும் தசவித நாதங்கள் முழங்குதல் கேட்கப்பெறும். ஆதலின், அவ்வனுபவத்தினை "முரசு எறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கி" என மாணிக்கவாசகர் மொழிந்தருள்கின்றார்.

6. மேகம் மழை பொழியுங்கால் நிகழும் மின்னலொளியும், இடி முழக்கமும் காரணமாகப் பாம்புகள் இறந்துபட்டு அழிவது இயல்பு; அம்முறையில் இறைவனின் திருவுருவக் காட்சியும், திருவருட் பேறும் தலைப்பட்ட அடியவர்களுக்குத் தம்மைக் கட்டுறுத்திப் பிறவியின்கண் செலுத்திவந்த பந்தனைகள் ஆகிய ஐம்புல அவாக்கள் அறவே நீங்கி அழிந்தொழிதல் பற்றி ''ஐம்புலப் பந்தனை வாள் அரவு இரிய'' என்றார்.

7. மேகம் மழை பொழியத் தொடங்கினால், கோடை காலத்தின் வெப்பம் குறைந்து தணிவு எய்தும். அதுபோன்றே இறைவனின் திருவருளுக்கு உரியவராயின பின், அடியவர்களின் துயரங்களும் முடிவெய்தும். இவ்வுண்மை "வெத்துயர்க் கோடை மாத்தலை கரப்ப" எனச் சுட்டப்பெற்றது.

8. மேகம் மழை பொழிகின்ற கார்காலத்தில், தோன்றியும் காந்தளும் ஆகிய பூக்கள் மலரும்; இந்திர கோபப் பூச்சிகள் எங்கணும் தோன்றிப் பறந்து விரைந்தழியும். மாணிக்கவாசகர்க்கு இறைவன் குருவடிவில் எழுந்தருளி, 'அஞ்சேல்' என்று காட்டியருளிய திருக் கையாகத் தோன்றிமலரும், இறைவனைக் காணப்பெற்று வணங்கிய அடியரர்களின் கூப்பிய கைகளாகக் காந்தள்மலரும், இறைவனின் அருளை எய்தப் பெற்றதனால் அடியவர்களின் பிறப்பிறப்புக் கவலைகள் அழிந்தொழிதலாக இந்திரகோபப் பூச்சிகள் (ஈயல்) பரவி அழிதலும், பொருத்தமுற உருவகம் செய்யப் பெற்றுள்ளன.

9. கார்காலத்தில் மழை பொழிவதற்கு முன்னர், வேனிற் காலத்து வெயிலில், காடுகளிலுள்ள மான் கூட்டங்கள் நீர்விடாய் கொண்டு, பேய்த்தேர் (Mirage) ஆகிய கானலினை, நீர் என்று மயங்கித்தேடி ஓடி அலைந்து திரிந்து வருந்தும். அறுவகைச் சமயத்தவர்களை மான் கூட்டமாகவும், அவர்தம் பொருந்தாக் கொள்கைகளை நீர்விடாய் தணித்தற்குதவாத பேய்த்தேர் என்னும் கானல் நீராகவும், இங்கு மாணிக்கவாசகர் உருவகம் செய்துள்ளார்.

10. மழை பொழிதலினால் ஆற்றில் நீர் பெருகுதலை அருள் வெள்ளம் என்றும் அதன்கண் சுழிகள் கொழித்தலை இன்பமேலீடு என்றும், இருகரைகளும் சரிதலை உலகியற் பந்த பாசங்களின் ஒழிவு என்றும், இரு கரைகளிலுமுள்ள மரங்கள் வெள்ளப்பெருக்கால் வேர் அற்றுச் சாய்ந்து சிதைதலைப் புண்ணிய பாவங்களாகிய இரு வினைகளும் நீங்குதல் என்றும், வெள்ளநீர் பாயப்பெறும் வயல்களை அருச்சனையாகிய வழிபாடு என்றும், விதையினை அன்பு என்றும், அடியார்கள் ஆகிய தொண்டர்களை உழவர்கள் என்றும், பிறவாறும் ஏற்றபெற்றி பொருத்தமுற உருவகித்திருக்கும் மாணிக்கவாசகரின் புலமை மாட்சிமை பெரிதும் புகழ்ந்து போற்றற்பாலதொன்றாகும்.

## திருவண்டப்பகுதியின் சிறப்பு :

கவிஞனின் தூய சிறந்த உணர்ச்சியானது உந்தப்பெற்று, மேலெழுந்து பொங்கி ஆற்றலுடன் வெளிப்படும்போது, அழகிய இனிய அரிய சொற்களும், சொற்றொடர்களும், அக்கவிஞன் ஒரு சிறிதும் முயற்சி செய்ய வேண்டாமல், தாமே தம்முள் இகலிக் கொண்டு முன்வந்து நின்று, ஏவல்கேட்டுப் பணிபுரியும் நிலையில், அவன் பாடும் கவிதைகளில் மிகவும் சிறப்புற அமைந்து திகழும் என அறிஞர்கள் கூறுவர். அவ்வுண்மைக்கு ஏற்பவே, இத்திருவண்டப் பகுதி அகவற்பாவின் சொற்களும், சொற்றொடர்களும் சுவை நிரம்பி, எளிதினிது பொற்புற அமைந்திருக்கின்றன. இனிய சிறந்த இவ்வியல்பு, நினைத்தொறும் நினைத்தொறும் நம்மனோர்க்கு இன்பம் விளைவிக்கின்றது. இச்சிறப்பெல்லாம் கருதியே, மேலை நாட்டுப் பேரறிஞர் ஆகிய திரு. ஜி. யு. போப் அவர்கள், இத் திருவண்டப் பகுதியின் வரிகளை மிகச் சிறப்பாக விதந்தெடுத்து வியந்து போற்றியுள்ளார். [9]

இனி, வேறொரு சிறந்த பாடலின் சொற்பொருள் நலங்களை ஈண்டு ஒரு சிறிது சுவைத்து இன்புற்று அமைதல் சாலும். திருவாசகத்தில், அனைத்துமே சிறந்த அரிய இனிய பாடல்களாகும். ஆயினும் அவற்றுள்,

> "இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
> தெழுகின்ற ஞாயிறே போன்று
> நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்;
> நீயலாற் பிறிதுமற் றின்மை
> சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
> திருப்பெருந் துறையுறை சிவனே;
> ஒன்றுநீ யல்லை அன்றியொன் றில்லை
> யாருனை அறியகிற் பாரே?"

(9) "Lines 66-95 are well nigh untranslatable, for they contain a subtle and intricate allegory, by means of which the grace of the manifested Sivan, who is praised under the title of the 'Cloud' is set forth. In these profound and pithy lines, every particular of the description has its mystical meaning"

*-Rev. Dr. G. U. Pope*

என வரும் அழகிய இனிய பாடல், திருவாசகப் பாடல்களிலேயே மிக மிக முதன்மையான விழுமிய முழுமணி போன்ற பெருநலம் சான்றதாகும். இதனைத் திருவாசகத்தின் 'இருதய சுலோகம்' என்றும் கூறலாம். தொட்டனைத்தூறும் மணற்கேணி போலக் கற்றனைத்தூறும் பற்பல சிறந்த நுண் பொருள்களைத் தன்னகத்தே பொதிந்து கொண்டு, பொலிந்து விளங்குகின்றது இவ்வரிய சிறந்த திருப்பாடல்.

## பாடலின் கருத்து :

திருவாசகத்தில் 'கோயிற்றிருப்பதிகம்' என்னும் பகுதியில், ''அநுபோக இலக்கணம்'' கூறும் பாடல்களுள் ஒன்றாக இப்பாடல் அமைந்துள்ளது. இதன்கண் மாணிக்கவாசகப் பெருமான், இறைவன் தமக்கு அருள் செய்ததனையும்; தம்மைப் பற்றியுள்ள மலத்தைப் போக்கித் தம் அறியாமையை நீக்கியதனையும்; தம்முடைய உள்ளத்தில் ஞான ஒளியைப் பரப்பும் சூரியனாகத் தோன்றி நிலை பெற்ற இயல்பினையும்; அத்தகைய இறைவனின் அருட்பெரும் இயல்புகளைத் தாம் நினைப்பற நினைந்து போற்றி வருதலையும், குறிப்பிட்டருளுகின்றார்.

இறைவன் அணுவினும் மிகமிக நுண்ணியனாய் எல்லாப் பொருள்களிலும் கலந்து நின்று இயக்கிவரும் அத்துவித இயல்பும்; உலகிலுள்ள உயிர்ப்பொருள் உயிரில்பொருள்கள் (சித்து, சடம்) என்பவை, இறைவன் இயக்கினால் அன்றி இயங்கமாட்டாமையும்; அங்ஙனமே யாவற்றையும் இயக்கும் இறைவன் அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டு அதீதநிலையில் விளங்கும் தன்மையும்; அத்தகைய இறைவனை உயிர்கள் தம்முடைய முயற்சியினால் சுட்டறிவு கொண்டு அறிதல் இயலாது என்னும் உண்மையும்; இப்பாடலின்கண் நன்கினிது விளக்கப்பட்டு இருக்கின்றன. இப்பாடலின் ஒவ்வொரு சொல்லும் மிகமிக ஆழ்ந்து ஆராய்ந்து நுனித்து உணர்தற்கு உரியதாக அமைந்துள்ளது.

## பாடலின் பொருள் :

“இந்நாளில் எனக்கு அருள்புரிந்து என்னுடைய அறியாமை ஆகிய இருளைப் போக்கி, மனத்தின் உள்ளே வெளிப்படுகின்ற சூரியனைப்போல வெளிப்பட்டு நிலைபெற்ற நின்னுடைய சிறந்த இயல்புகளை இடைவிடாமல் எப்பொழுதும் நினைந்து துதிக்கும் பேற்றை யான் பெற்றேன்.

உன்னையல்லாமல் வேறொரு பொருளும் இல்லாதபடி, எல்லாப்பொருள்களிலும் கலந்து கலந்து, அணுத்தன்மைப்பட்டு நுணுகி, நுணுகி எங்கும் ஒருதன்மையாய் விரவி நிற்கும் ஒப்பற்ற பொருளாகத் திருப்பெருந்துறையின்கண் உறைகின்ற சிவபெருமானே!

காணப்படும் பொருள்களுள், நீ ஒரு பொருளும் ஆகமாட்டாய் ஆயினும் உன்னையல்லாமல் ஒரு பொருளும் இயங்குவதில்லை. இத்தகைய நின்னை அறியும் வல்லமை உடையவர்கள் உலகில் யாவர் உளர்? எவரும் இலர்”

என்பது திருவாசகத்தில் வரும் எத்துணையோ பல சிறந்த பாடல்களுள், ஒருபெரும் விழுமிய முழுமணி போன்று ஒளிவிட்டு விளங்கும் இவ்வரிய இனிய பாடலின் திரண்ட பொருள் ஆகும். இதன்கண் ஒவ்வொரு சொல்லும் சொற்றொடரும் மிக நுணுகிய ஆழ்ந்த பொருள்நலம் உடையது. அவற்றை இங்கு இயன்றவரை ஆராய்ந்து காண்போம்.

## சொற்பொருள் நலங்கள் :

1. **‘இன்று’** என்றது, சிவபிரான் திருப்பெருந்துறையில் குருந்த மரநிழலில் ஆட்கொண்டருளிய புனித நாளை உணர்த்து கின்றது எனக் கொள்ளலாம். மாணிக்கவாசகப் பெருமான், (அ) “மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்” (ஆ) “பெருந்துறையின் மேய பெருமான் பிரியாது இருந்து உறையும் என் நெஞ்சத்துள் இன்று” (இ) ‘‘இன்று எனக்கு ஆரமுது ஆனாய் போற்றி” (ஈ) “அளித்தனன் உன்னைக் கண்ணுறக்

கண்டு கொண்டு இன்றே" என, **இன்று** என்னும் சொல்லைப் பல இடங்களில் மணிவாசகர் வழங்கியருளிச் செய்திருத்தல் காணலாம்.

2. **'எனக்கு அருளி'** என்னும் தொடரில், 'எனக்கும்' என்ற இழிவு சிறப்பு உம்மை மறைந்து நின்றது. 'எனக்கு' என்னும் சொல், தம்முடைய சிறுமைகளை எல்லாம் தொகுத்துச் சுருக்கி உணர்த்தும் வகையில் அருளிச் செய்யப்பட்டதாகலின், அஃது 'இசை எச்சம்' எனக் கொள்ளப்பெறும்.

3. **'இருள்கடிந்து'** என்றது, இறவன் தமக்கு ஞானோப தேசம் செய்து, தமது அறியாமையைப் போக்கியருளிய பேருதவியை வியந்தவாறு, 'குற்றங்கடிதல்' என்றாற் போல 'இருள்கடிதல்' என்று குறிப்பிட்ட திறம் உணர்ந்து இன்புறற்பாலது.

4. அருளைப் போக்குதலும், ஒளியைப் பரப்புதலும், ஞாயிற்றின் செயல். அம்முறையில் தமது அறியாமை இருளைப் போக்கித் தமக்கு ஞானஒளியைக் கொடுத்தருளியமை பற்றி, அடிகளார் இறைவனை ஞாயிறு என வியந்து போற்றினார். நக்கீரர் பெருமானும், முருகனை ஞாயிறு என விளக்கியிருத்தல் இங்குக் கருதற்பாலது. மாலையில் மறையும் சூரியனை விலக்கி, ஒளிமிகுந்த அழகிய காலைக் கதிரவனை உணர்த்துவதற்காக **'எழுகின்றஞாயிறு'** என்றார். 'ஞாயிறே போன்று' என்பதில் ஏகாரம் பிரிநிலை; சந்திரன் விண்மீன்கள் ஆகிய பிற ஒளிப் பொருள் களை விலக்கியது.

5. சூரியன் கிழக்குக் கடலில் அல்லது உதயமலையில் தோன்றுவதாகக் கூறுவது கவி மரபு. அந்தப் பௌதிக சூரியனை விலக்கி, ஞான சூரியனாகிய இறைவனையே சுட்டி உணர்த்த **'உள்ளத்து எழுகின்ற ஞாயிறு'** என்று விதந்து கூறினார். இனி, 'உள்ளத்து' என்பதை 'எழுகின்ற' என்னும் சொல்லோடு சேர்த்துக் கொள்ளாமல், 'உள்ளத்து நின்ற நின்தன்மை' எனவும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலாம். இறைவன் உலகமெங்கும் வியாபித்திருந்தாலும், அன்பர்களாகிய ஞானிகளின் உள்ளத்திலேயே நிலைபெற்றுத் தங்கி வீற்றிருக்கின்றான் என்பது, வேதாகமங்களின்

முடிவு. அஃது இங்கே குறிப்பிடப்பட்டதாகக் கொள்ளலாம். "பெருந்துறையின் மேய பெருமான் பிரியாது இருந்து உறையும் என் நெஞ்சத்து இன்று" எனவும்; "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" எனவும்; "என்னுடைய சிந்தையே ஊராகக் கொண்டான் உவந்து" எனவும் மணிவாசகர் கூறுதல் காண்க.

6. **'நின்று'** என்னும் சொல் காலவழுவமைதி. 'நிற்கின்ற' என்னும் பொருளில் வந்தது. "முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழும் காலத்தானே" என்பது நன்னூற் சூத்திரம். 'மலர்மிசை ஏகினான்' எனத் திருவள்ளுவர் இறந்த காலத்திற் குறிப்பிட்டதும், ஆசிரியர் பரிமேலழகர் அதனைக் காலவழுவமைதி என்று விளக்கியிருப்பதும், இங்கே சிந்தித்து இன்புறுதற்குரியன.

7. **'நின் தன்மை'** என்பது, இறைவனின் உயர்வற உயர்ந்த பெருநலங்களையும், அத்தகைய இறைவன் தம்பொருட்டு எளிவந்து இரங்கிப் புரிந்தருளிய எல்லையற்ற பேரருள் உதவி களையும், தொகுத்து உணர்த்தும்.

8. **'நினைப்பற நினைந்தேன்'** என்னும் தொடர், இப்பாடலில் மாணிக்கவாசகரால் முதன் முதலிற் புதிதாகப் படைத்து வழங்கப்பெற்ற-அருமைமிக்க-ஓர் அழகிய–இனிய-பொருள் பொதிந்த சொற்றொடர் எனலாம்! 'நினைப்பு' என்பது மறப்பின் பின் நிகழ்வது. மறந்ததை நினைப்பதும், நினைத்ததை மறப்பதும் நம்மனோர்க்கு இயல்பு. மாறி மாறி அடுத்தடுத்து நிகழும் நினைப்பு மறப்புக்கள் இல்லாதபடி, எப்பொழுதும் இடைவிடாமல் நினைத்து இறைவனைத் தியானித்துக்கொண்டு, அவனோடு ஒன்றியிருக்கும் திருவருட் பேற்றினை எய்தப் பெற்றமையினால், மணிவாசகர் 'நினைப்பற நினைந்தேன்' என்று அருளிச் செய்தார். இதனைச் 'சாக்கிர அதீத நிலை' எனச் சைவசித்தாந்த நூல்கள் கூறும் 'நினைப்பற நினைந்தேன்' என்னும் இவ்வரிய தொடரின் அருமைப் பாட்டை மிகவும் வியந்து, கவிஞர்கள் பலர் இதனைத் தத்தம் கவிதைகளில் தழுவிப் போற்றிக் கொண்டுள்ளனர்.

9. **'நீ அலால் பிறிது மற்று இன்மை'** என்னும் தொடர், இறைவன் இவ்வுலகப் பொருள்கள் எல்லாமாகவும் விளங்கும் தன்மையை உணர்த்துகின்றது. 'எல்லாம், சிவன் என்ன நின்றாய் போற்றி' என்பது, திருநாவுக்கரசர் தேவாரம். ஞானிகள் இவ்வுலகப் பொருள்களை எல்லாம் சிவ மயமாகவே காண்பர். எவ்விடத்திலும் எல்லாப் பொருள்களிலும் சிவத்தைக் காண்பதும், எல்லாவற்றையும் சிவமயமாகவும் சிவச்செயலாகவும் கொள்வதும் ஞானிகளின் இயல்பு. இந்நிலையினை எய்தும் தன்மையே ஞானப் பேற்றிற்கும் அறிகுறியாகும்.

> பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர்
> பரமே பார்த்திருப்பர்;
> பதார்த்தங்கள் பாரார்...... [1]
>
> "சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்" [2]

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளுக்கு ஏற்ப, மாணிக்கவாசகர், எல்லாம் சிவமயமாகக் காணும் நல்லாராக விளங்கப் பெற்றதனை, 'நீ அலால் பிறிது மற்று இன்மை' என்னும் தொடர், தெளிவுறப் புலப்படுத்துகின்றது.

10. 'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து' என்னும் தொடர், இப்பாடலில் மிகமிக முதன்மை வாய்ந்த ஒரு சிறந்த தொடராகும். இத்தொடரின்கண் வரும் 'அணு' என்னும் சொல் ஆன்மாவைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். ஆணவ மலத்தின் சேர்க்கையால், உயிர் தன்னுடைய வியாபகத் தன்மை குன்றி அணுவைப் போன்று குறுகிய தன்மையை அடைதலின், உயிர்களுக்கு அணு என்றும் ஒரு பெயர் வழங்கும்.

அ) **'சென்று சென்று, தேய்ந்து ,தேய்ந்து'** என வரும் தொடர்களுக்குப் பலவகையில் பொருள்கள் கொள்ள வாய்ப்பு உண்டு. [10] அவைகளுள் இவை இறைவன் மிகமிக நுண்ணியனாதலை உணர்த்துகின்றன என்பது ஒரு கருத்து.

---

(10) "Words do not have *either-or* meanings in imaginative poetry; they have *and-and-and* meanings. That is how poetry works".
– *Hillary Corke*

ஆ) ஆன்மாக்கள் படிப்படியாக வெவ்வேறு பிறவிகளையும் நிலைகளையும் அடைந்து, முடிவில் இறைவனை அடைகின்றன என்பதனை உணர்த்துகின்றன என்பது, பிறிதொரு கருத்து.

இ) 'சென்று சென்று' என்பது உயிர்களின் உலகப் பற்று நிலையையும், 'தேய்ந்து தேய்ந்து' என்பது உயிர்களின் இறையருட் பற்று நிலையையும் குறிப்பதாகவும், இவற்றைக் கொள்ளுதல் கூடும்.

ஈ) இனி, உயிர்களின் மலப்பிணிப்பு நிலையில், இறைவன் உயிர்களின் பின்னே சென்று சென்று, 'புறம் புறம் திரிந்த செல்வமே' என்றாற்போல ஆட்கொள்ளுகின்றான்; அருள்பெற்ற நிலையில் உயிர்கள் இறைவனின் பின்னே செல்லத் தலைப்பட்டுத் தம்முடைய குற்றங்கள் எல்லாம் தேய்ந்து தேய்ந்து ஒழிய, உய்தியும் உயர்வும் பெறுகின்றன. இந்த உண்மையையும், இத்தொடர்கள் உணர்த்து வதாகக் கொள்ளலாம்.

உ) தூலதேகம், சூக்குமதேகம், காரணதேகம் என்பனவற்றில் எல்லாம் சென்று சென்று, அணுத்தன்மை இத்தகையதென்று அறிந்து அழுந்தி, சீவபோதமும் கன்மநுகர்ச்சியும் ஆகியவை தேய்ந்து தேய்ந்து குறைந்தொழிய, உயிரானது சிவபரம் பொருளோடு ஒன்று சேரும் நிலையை, இத்தொடர்கள் குறிப்பிடு கின்றன எனவும், நாம் கொள்ளுதல் அமையும்.

ஊ) கானல் நீர் கண்டு மயங்கி இங்கும் அங்கும் எங்கும் ஓடி அலையும் மான் கணம்போல, உயிர்கள் இன்பம் என்று எவ்வெ வற்றையோ பிறழ உணர்ந்து பெருமயக்குற்று அலைந்து திரியும் இயல்பினைச் 'சென்று சென்று' என்றும்; பின்னர் அவைகளே தாம் இன்பமெனக்கருதிய பொருள்கள் துன்பமாதலை அனுபவித்து உணர்ந்து தாம் அவற்றின்பாற் கொண்ட அவாவும் பற்றும் முறை முறையே கழியப் பெறுதலைத் 'தேய்ந்து தேய்ந்து' என்றும் குறிப்பிட்டதாகக் கொள்ளுதலும் பொருந்தும். சென்று சென்று திரிதல் 'ஆரா இயற்கை அவா'; தேய்ந்து தேய்ந்து கழிதல் 'அவா நீத்தல்'; அந்நிலையே பேரா இயற்கை பெறுதல் 'ஒன்றாதல்' எனக் கொள்ளுதல் பொருந்தும்.

11. **'ஒன்றாம்'** என்னும் சொல், சிவனே என்னும் விளிச் சொல்லுடன் இயையும். இங்கு ஒன்றாதல், ஒப்பற்ற பொருள் ஆதலையும், இரண்டறக்கலந்து அத்துவிதமாதலையும் உணர்த்தும். 'ஒன்றலா ஒன்றால் உளதாகி' என வரும் சிவஞானபோதத்தால், **ஒன்று என்பது, கடவுளுக்கே உரிய சிறப்புப் பெயராதல் அறியலாம்.**

12. 'திருப்பெருந்துறை' என்பது இங்கு அப்பெயர் கொண்ட தலத்தை மட்டும் குறியாமல், 'வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க' என்றபடி, சைவ சமயம் அல்லது சைவ சித்தாந்தம் ஆகிய அருள்நெறிப் பெருந்துறையினைக் குறிப்பதாகக் கொள்வதும் உண்டு. இப்பாடலைக்கொண்ட இத்திருப்பதிகம், திருப் பெருந்துறையில் அருளிச்செய்யப் பெறாமல், தில்லையிலேயே அருளிச் செய்யப்பெற்றதாகத் தெளிந்து, 'கோயிற்றிருப்பதிகம், எனப் பெரியோர்களால் வழங்கப்பட்டு வருவதும், இங்கு நாம் நினைவு கூரத்தக்கது.

13. **'ஒன்றும்நீ அல்லை'** என்னும் தொடர், இறைவன் உயிர்ப்பொருள் உயிரில் பொருள்களில் எல்லாம் கலந்து நிற்பினும், அவற்றினுள் ஒன்றாகாமல் அவற்றையெல்லாம் கடந்து அத்த நிலையனாய் அப்பாற்பட்டு நிற்பன் என்பதனை உணர்த்திற்று.

14. **'நீ அன்றி ஒன்று(ம்) இல்லை'** என்னும் தொடர், உடலுக்கு உயிர்போல நின்று இறைவன் இயக்கினால் ஒழிய, உயிர்ப்பொருள் உயிரில் பொருள் ஆகிய எவையும், தாமே இயங்கும் ஆற்றல் உடையன அல்லாமையைப் புலப்படுத்திற்று.

15. இங்கு **'அல்லை' 'இல்லை'** என்ற சொற்களின் குறிப்பு மிக நுட்பமானதாகத் திகழ்கின்றது. 'அல்லை ஈது அல்லை ஈது' என மறைகளும் இறைவனை அன்மைச் சொல்லினா லேயே துதிக்கும். 'இன்மை' என்னும் சொல் இல்லாமையை உணர்த்தாமல், முனைத்து நில்லாமை அல்லது விளங்கித் தோன்றா மையை உணர்த்துவதாகக் கொள்ளுதல் வேண்டும். 'யாவையுஞ் சூனியம் சத்தெதிர்' என்னும் சிவஞான போதவுரை காண்க.

16. **'ஆர்உன்னை அறியகிற்பார்?'** என்றது, உயிர்கள் தம்முடைய சுட்டறிவினால் இறைவனை அறிதல் இயலாது என்பதும், யானையின் துணைகொண்டே யானையின் மீது ஏற வேண்டுவது போல, இறைவனை அறிதற்கு அவனுடைய அருளையே துணையாகப் பற்றல் வேண்டும் என்பதும் உணர்த்திற்று. 'தன்னறிவு அதனாற் காணும் தகைமையன் அல்லன் ஈசன்' என்பது சிவப்பிரகாசம்.

## சான்றோர் போற்றுரை :

இங்ஙனம் எண்ணி எண்ணி உணருந்தோறும் நுண்ணிய பல பொருள்களை உணர்த்தி நிற்பதனால், இவ்வரிய இனிய இணையற்ற பாடலின் சிறப்பைச் சான்றோர்கள் பலரும் உவந்து போற்றி உள்ளனர். சைவ சித்தாந்தப் பெருஞ் சான்றோராகிய உமாபதி சிவம்,

> "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்
> என்றிறை யியற்கை யியம்புதல் தகுமே"

எனத் தாம் இயற்றிய சங்கற்ப நிராகரணம் என்னும் தத்துவப் பெருநூலில், இத்திருவாசகச் செய்யுளை மேற்கோளாக இன்றைக்கு 600 ஆண்டுகளுக்கு முன்னரே எடுத்துக் காட்டிப் போற்றியிருத்தல் காணலாம். அவ்வாறே வேதாந்த சித்தாந்த சமரச ஞானப்பெருஞ் செல்வராகிய தாயுமான சுவாமிகள் அவர்களும்,

> நினைப்பறவே தான் நினைந்தேன்
> என்றநிலை நாடி
> அனைத்துமாம் அப்பொருளில்
> ஆகும் நாள் எந்நாளோ? [1]

> சென்றுசென் றணுவாய்த்
> தேய்ந்துதேய்ந் தொன்றாகி
> நின்று விடும் என்றநெறி
> நிற்கும்நாள் எந்நாளோ? [2]

என்று இத்திருவாசகப் பாடலைக் குறித்துத் தம்முடைய திருப் பாடல்களில் வியந்து வியந்து புகழ்ந்து போற்றியிருத்தலும், இங்கு நாம் உணர்ந்து மகிழ்தற்குரியது.

திருவாசகத்தின்கண் 51 திருப்பதிகங்கள் உள்ளன. அவற்றுள் நீத்தல் விண்ணப்பம் என்பது ஒன்று. நீத்தல் விண்ணப்பப் பாடல்கள் அந்தாதி முறையில் அமைந்தவை; சிறந்த சொற்பொருட் சுவை நலங்களும் அழகிய பல உவமைத் தொடர்களும் அரிய இனிய கவிதைத் திறங்களும் செறிந்தவை; அன்புடன் ஓதுபவர்களின் உள்ளங்களைக் கொள்ளைகொண்டு உருக்கி மகிழ்விக்கும் சிறப்பு உடையவை.

"திருவா சகநூல் பதிகங்கள்,
சிறப்பின் ஐம்பத் தொன்றாகும்;
ஒருவா தவற்றுள் ஒவ்வொன்றும்
உயர்வும் சிறப்பும் உடைத்தெனினும்,
'இறைவா எனைநீ கைவிடற்க'
என்னும் நீத்தல் விண்ணப்பம்,
நிறைவாம் கவிதை நலங்கள்பல
நிரம்பிச் சிறந்து திகழ்ந்தோங்கும்!" [1]

"அரிய நல்ல கவிநலங்கள்,
அழகார்ந் தொளிரும் சொற்பொருள்கள்,
உரிய சிறந்த பொருத்தமிகும்
உவமைத் தொடர்கள், பழமொழிகள்,
தெரியத் தெரியத் தெய்வநலம்
தேற்றும் திறன்கள் என்பவற்றால்,
பெரிதும் நீத்தல் விண்ணப்பம்
பிறங்கி ஓங்கிச் சிறந்துநிற்கும்!" [2]

— ந.ரா. மு.

இத்தகைய நீத்தல் விண்ணப்பத்தின்கண் வரும் ஒரு செய்யுளின் சொற்பொருட் சுவைநலங்களை மட்டும், இங்கு இறுதியாக ஒரு சிறிது கண்டு இன்புற்று அமைவோம்.

"ஏசினும் யான்உன்னை ஏத்தினும் என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்,செம் பவளவெற்பில்
தேசுடை யாய்என்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலம்உண் டாய்அமுது உண்ணக் கடையவனே!"

## பாடலின் பொருள் :

"பழித்து உரைத்தாலும் அல்லது உன்னைப் புகழ்ந்து உரைத்தாலும், யான் என்னுடைய பிழையையே நினைந்து நினைந்து உள்ளம் குழைவுற்றுக் கரைந்து உருகி மிகவும் வருந்துவேன்! அத்தகைய என்னை நீ கைவிட்டு விடுவாயோ! விட்டுவிடாதே! செந்நிறமுடைய பவளமலை போல ஒளிவிடுகின்ற திருமேனியை உடையவனே! எளியேனையும் ஆளாகக் கொண்டவனே! சிற்றுயிர்களாகிய தேவர்களின் பொருட்டு இரக்கங் கொண்டு கொதித்து எழுந்த ஆலாலம் என்னும் கொடிய நஞ்சை (முன்வந்து) உண்டருளியவனே! அமிழ்தம் உண்ணுதலில் இறுதியாக இருப்பவனே!" – என்பது, இப்பாடலின் திரண்ட பொருள்.

## சொற்பொருட் சுவைநலங்கள் :

1. மனிதர்க்கு அறிவு அறியாமை ஆகிய இரு நிலைகள் உண்டு. அறியாமை நிலையில் இறையுணர்வு இன்றியும், அறிவு நிலையில் இறையுணர்வு மிக்கும் மனிதர்கள் இருப்பர். இறையுணர்வு இல்லாத அறியாமை நிலையில் இறைவனை ஏசுதலும், இறையுணர்வு மிக்க அறிவு நிலையில் இறைவனை ஏத்துதலும் மனிதர்க்கு இயல்பு. ஆதலின் **"ஏசினும், உன்னை ஏத்தினும்"** என்றார்.

2. இனி, "வாயார உண்டபேர் வாழ்த்துவதும், நொந்தபேர் வைவதுவும் எங்கள் உலக வாய்பாடு" எனத் தாயுமானவர் பாடுதல் போல, நலம் பெற்றபோது துதித்தலும், நலம் பெறாதபோது இகழ்தலும் பற்றி, **"ஏசினும் உன்னை ஏத்தினும்"** என்றார் எனினும் ஆம். ஏசுதலில் அன்றி, ஏத்துதலில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட திறம் ஓர்ந்துணர்ந்து மகிழற்பாலது.

3. 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்பது உணராமல், செய்தீவினை இருக்கச் சிவனை நொந்து ஏசிய தம் சிறுமையினை நினைந்து, 'அந்தோ! அந்தோ! அந்தோவே!' (திருவா. 612) எனக் கழிவிரக்கம் கொண்டு வருந்துதலின், **'என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்'** என்றார். வேசறுதல்–வருந்துதல். ''இரைதேர் கொக்கு ஒத்து இரவு பகல் ஏசற்றிருந்தே வேசற்றேன்'' (திருவா. 380) என்பது காண்க.

4. ஏசியதற்கு வேசறலாம், ஏத்துதற்கு வேசறுதல் எற்றுக்கு? எனின், இறைவன் எல்லையற்ற பொருள்சேர் புகழும், சிறப்பும் உடையவன். இறைவனின் எல்லையற்ற பெருமைகளை உணர்தலும் ஓதுதலும் நம்மனோரால் இயலாத செயல். அங்ஙனமாகவும், 'இன்னன் என்றுரைத்தல் எமக்கு எவன் எளிது?' என்று எண்ணி அமையாமல், 'உய்த்தல் அறிந்தும் புனல் பாய்பவரே போல்', இத்தகையதென்று இறைவனின் புகழை அளவிட்டுக் கூறத் துணிந்த தமது அறியாமை முனைப்பின் திறம் நினைந்து **''ஏத்தினும் என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்''** என்றார்.

5. இறைவனை வியப்பிக்கவும் மகிழ்விக்கவும் விழைந்து, அவனது எல்லையற்ற புகழைச் சொல்லத் தலைப்பட்டு, அதனில் ஒரு சிறிதேனும் செவ்விதின் உணராது, ஈங்கும் ஊங்குமாகச் சில பிதற்றி, 'இவன் அறிந்தவாறு இதுவே போலும்' எனக் கருதி, இறைவன் எள்ளல் நகை கொள்ளும்படி செய்வித்துத் தாம் தமது அறிவின்மையைப் புலப்படுத்திக் கொண்டதாகக்கருதி, **'ஏத்தினும் என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்'** என்றார் எனினுமாம்.

> ''நின்புகழ் விரித்தனர் கிளக்குங்கால் அவைநினக்கு
> இறும்பூது அன்மை, நற்கு அறிந்தேம் ஆயினும்
> நகுதலும் தகுதி; ஈங்கு ஊங்குநிற் கிளப்ப''

எனவரும் பரிபாடல் வரிகள், இங்கு நாம் நினைவு கொள்ளத் தக்கவையாகும்.

6. "என் பிழைக்கே" என்புழி ஏகாரம் பிரிநிலை; இதற்கு முன்பெல்லாம் இறைவனின் பிழையாகத் தாம் பிறழ உணர்ந்து கருதி வந்ததனை விலக்குதலின். தம் பிழையைப் பிறர்மேல் ஏற்றி விட முயலுதல், கீழோர் செயல். அங்ஙனம் இன்றித் தம் பிழையைப் பிழை என உணர்ந்து உடம்பட்டுக்கொண்டு, அதற்காக மனம் வருந்தித் திருந்துதல் பெரியோர் செயல். ஆகலின் **"என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்"** என்றார்.

7. தம் பிழை யுணர்ந்தவழிக் குழைதல் அல்லது வேசறுதல் என்னும் இரண்டனுள் ஒன்றே அமையாதோ? இரண்டினையும் கூறுதல் எற்றுக்கு? எனின் – 'எற்றென்று இரங்குவ செய்யற்க; செய்வானேல் மற்றன்ன செய்யாமை நன்று' என்றபடி பிழையைப் பிழை என்று உணர்ந்தால், பிழை செய்தமைக்கு வருந்துதல் வேண்டும்; வருந்துதலோடு மட்டும் அமைந்துவிடாமல், அதற்குக் கழுவாய் தேடுவதுடன், இனி அத்தகைய பிழை செய்யாமல் இருக்க உறுதிபூண்டு முனைந்து முயலுதல் வேண்டும். ஆதலின் அவ்விரு வகைத் திறனும் உணர்த்தக் **"குழைந்து வேசறுவேன்"** என்றார். குழைதலின் விளைவாகவே வேசறுதல் நிகழ்கின்றது, குழைதல் காரணம்; வேசறுதல் காரியம். ஆதலின் 'குழைவேன், வேசறுவேன்' என்னாமல் "குழைந்து வேசறுவேன்" என்றார். குழைதல் – நெகிழ்தல்; மனம் கசிந்து உருகுதல். மணிவாசகர் 'குழைத்த பத்து' பாடியருளியவர் என்பதும் இங்கு நினைக்கத் தருவது.

8. மணிவாசகரை இறைவன் "செந்தழல் புரை திருமேனியும் காட்டித், திருப்பெருந்துறையுறை கோயிலும் காட்டி, அந்தணன் ஆவதும் காட்டி வந்து ஆண்டான்" ஆதலின், இறைவனது வண்ணமும் வடிவும் ஒளியும் நினைந்து வியந்து, **"செம் பவள வெற்பில் தேசு உடையாயி"** எனப் புகழ்ந்து போற்றினார். "முத்து – மா மணி – மாணிக்க – வயிரத்த – பவளத்தின் முழுச்சோதி" (திருவா. 432) என்றது காண்க. "வெற்பில்" என்புழி, ஐந்தன் உருபு உறழ் பொருளில் வந்தது. பவளம் நெய்தல்நிலப் பொருள். ஆதலின் 'பவள வெற்பு' என்றது அதிசயஅணி.

9. **'என்னை(யும்) ஆளுடையாய்'** என்பதில்,இழிவு சிறப்பு உம்மை தொக்கது. ''சிவன் எம்பிரான் என்னையும் ஆண்டு கொண்டான்'' என்றும், ''இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும் அந்தரமே நிற்கச் சிவன் அவனி வந்தருளி எந்தரமும் ஆட்கொண்டான்'' என்றும், ''யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான், யாவர்க்கும் கீழாம் அடியேனை யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தான்'' என்றும், மணிவாசகப் பெருமான் ஆங்காங்கே அருளிச் செய்திருத்தல் காணலாம்.

10. இங்ஙனம் தம்மை ஆட்கொண்டதற்குத் தம்முடைய தகுதி எதுவுமின்றி, இறைவனின் கருணையே காரணம் என்பார், அக் கருணைத் திறனை வியந்து வியந்து, ''சிற்றுயிர்க்கு இரங்கிக் காய்சின **ஆலம் உண்டாய்**'' என்று புகழ்ந்தார்.

11. சிறிய அறிவும் சிறிய தொழிலுமே உடையன ஆதலின் உயிர்களைச் **''சிற்றுயிர்''** என்றார். அறம் பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டுண்டு பிறந்தும் இறந்தும் உழன்று வருதல் ஆகிய சிறுமை பற்றி உயிர்களைச் **'சிற்றுயிர்கள்'** என்றார் எனினுமாம்.

12. ''சிற்றுயிர்'' என்றது. ஈண்டுத் **தேவர்களைக்** குறித்து நின்றது. மணிவாசகப் பெருமான் தேவர்களின் சிறுமையினைப் பல இடங்களிலும், ஆங்காங்கே குறிப்பிட்டருள்வர். ''சாவ முன்னாள் தக்கன் வேள்வித் தகர்தின்று...ஆவ எந்தாய் என்று அவிதா இடும் நம்மவர் அவரே, தேவர் என்றே இறுமாந்து என்ன பாவம் திரிதர்வரே'' (திருவா. 8) என்றும்; ''மிகு குறைவானவர்'' (மிகு, குறைவு ஆனவர்-திருவா. 590) என்றும்; ''பொய்வானவர்'' (பிறர் கூறும் பெருமை அவர்க்கு இன்மையிற் 'பொய்வானவர்' என்றார், கோவை-67) என்றும், பிறவாறும் வருதல் காண்க.

13. ''கோலாலமாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த ஆலாலம்'' ஆதலின், அதன் கொடிய இயல்பினைக் குறிக்கக் **'காய்சின ஆலம்'** என்றார்.

14. சிவபிரான் ஆலம் உண்டிலனேல், குமரகுருபரர் பாடுவது போலத் தேவமாதர்களின் செங்கைகளும் கொங்கைகளும் சிவக்கும் படி (மார்பில் அடித்துக் கொண்டு புலம்புமாறு), அன்று அயன் மால் உள்ளிட்ட மேலான தேவரெலாம்,

"மால்எங்கே? வேதன்உயர் வாழ்வுஎங்கே? இந்திரன்செங்
கோல்எங்கே? வானோர் குடிஎங்கே? – கோலஞ்சேர்
அண்டம்எங்கே? அவ்வவ் அரும்பொருள் எங்கே?உனது
கண்டம்அங்கே நீலம்உறாக் கால்"

என்று இராமலிங்கர் பாடுதல் போல, ஒருங்கே வீடி அழிந் தொழிந்திருப்பர் ஆதலின், "**இரங்கி**" என்றார்.

15. "நம்பா நினக்கு ஓலம்! முறையோ! எனக் கால நஞ்சுண்டு பித்துண்டு நாம் தேவர் என்பார்-தம் பாவையர்க்கு அன்று காதோலை பாலித்த **தயாவாளர்**" என்று குமரகுருபரர் பாடுதற்கு ஏற்ப, "இரங்கி" என்றார் எனினுமாம்.

16. ஆலம் உண்டது தம் வீரமும் பெருமையும் விளக்குதற்கு அன்றிச், சிற்றுயிர்களைக் காத்தருளுதற்கு விரும்பிய பரிவு காரண மாகவே யாதலின், '**இரங்கி**' என்றார். இறைவன் தனது எல்லையற்ற பேரிரக்கத்தால் புரிந்தருளிய செயல் ஆதல் பற்றியே, இறைவன் நஞ்சுண்ட நயத்தக்க நனிநாகரிகச் செயல், அவனது எண்வகை வீரச் செயல்கள் போன்றதொரு வீரச் செயலாகக் கருதப் பெறாமல், கருணை(இரக்க)ச் செயலாகவே நூல்களாலும் பெரியோர் களாலும் போற்றப்படுவதாயிற்று.

17. திருமால் முதலிய தேவர்கள் அனைவரும் திருப்பாற் கடலில் நஞ்சு தோன்றியபோது பிந்தினர்; ஆனால் அமுதம் தோன்றியபோது அதை உண்ணுதற்குத் தம்முள் ஒருவரை ஒருவர் இகலி முந்தினர்; அமுதுண்ணப் பிந்தினன் என்பார், இறைவனது பேரருளையும் பெருந்தகைமையையும் வியந்து, "**அமுதுண்ணக் கடையவனே**" என விளித்துப் புகழ்ந்து மகிழ்ந்தார்.

18. இறைவன், தானே எவருக்கும் இறவாப் பேறு அளிக்கும் அமிழ்தமாகத் திகழ்தலின், தேவர்களைப் போல அமுதம் உண்ண வேண்டிற்றிலன் என்பது கருத்து. "விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்து அருள் செய்குவாய்" என முத்தமிழ்ப் புலமை வித்தகராகிய இளங்கோவடிகள் அருளிச் செய்திருத்தல், இங்கு அறிந்து இன்புறற்பாலது.

19. அமுதுண்ணக் கடையவன் என்றது, தேவர் யாவரும் உண்ட பிறகு இறைவன் கடைசியில் அமுதுண்டான் என்னும் கருத்தில் வந்ததன்று. ஒரு செயலை யான் அது செய்திலேன், செய்யேன் எனக் கூறுவோர், 'அதனைச் செய்தற்கு நான்தான் கடைசி ஆளாக இருப்பேன்' (I will be the last person to do it) என்று கூறுதல் போன்ற ஒருவகைக் குறிப்பிற் போந்தது எனலாம். இஃது ஒரு சார்பு எடுத்துக்காட்டேயன்றித் தமிழ் வழக்கிற்குப் பொருள் காண ஆங்கில வழக்கினை மேற்கொள்ளலாம் போலும் எனச் சிலர் பிறழ உணர்ந்து கொள்ளுதற்கு அன்று. மலத்திலக்கணம் வடமொழி வழக்குப்பற்றி ஓதுவார் '**ஞான திரோதகமாய்**' எனவும், அதனைத் தமிழ்மொழியின் உரைத்துக் காட்டுவார் '**மறைத்துக் கொடு நிற்றலான்**' எனவும் கூறினார், என வரும் சிவஞான போதப் பேருரை போல்வன, இங்குச் சிந்திக்கத் தகும்.

20. இறைவன் 'அமுதுண்ணக் கடமைப் பட்டவன்' எனச் சிலர் பொருள் கொள்கின்றனர். அப்பொருள்பட வேண்டுமாயின் '**கடமையனே**' என்றோ, அல்லது '**கடவியனே**' என்றோ தான் சொல்லமைப்பு இருந்திருத்தல் வேண்டும். மேலும் 'கடமை' என்பது 'கடன்மை' என்பதன் மரூஉ. அதற்குக் கடன்படுந்தன்மை (Due, duty) என்பது பொருள். இறைவனைக் கடன்பட்டவனாகக் கருதுதல் பொருந்தாது.

21. தேசுடையாய்! ஆளுடையாய் ஆலமுண்டாய்! என்பன போல, அமுதுண்ணக் கடையவனே! என்பதும் ஒரு விளி. அது 'விடுதிகண்டாய்' என்பதனைக் கொண்டு முடியும். ஆதலின் இங்குக் கடையவன் என்பது சிவபெருமானையே குறிக்கும். எல்லா

வற்றிற்கும் ஆதியும் அந்தமும் ஆக விளங்கும் இறைவனைக் கடையவன் என்றலிற் பிழை ஒன்றும் இல்லை. இதனை மணிவாசகர்க்கு ஏற்றுவதாயின், சொற்கிடந்தவாறே பொருள் கொள்ளாது 'கடையவள் அமுதுண்ண ஆலமுண்டாய்; எனை விடுதி கண்டாய்' என்று தேவையின்றிப் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளல் (விபாக யோகம் புரிதல்) வேண்டும். மேலும் மணிவாசகப் பெருமான், தாம் அமுதம் உண்டதாக எங்கும் பாடிற்றிலர் என்பதும் கருதுதற்கு உரியது. மணிவாசகர் தம்மைக் கடையவன் என்று குறிப்பிட்டுக் கொள்ளுதலில் யாதொரு வியப்பும் சிறப்பும் இல்லை. அவர் சிவபிரானைக் கடையவன் என்றதே, "சேர்ந்தறியாக் கையான் – குணமிலி - மானிடன் - தேய்மதியான்" என்றாற் போன்ற சுவை நயம் உடையது.

22. அந்தாதி முறையில் அமைந்த இந்த நீத்தல் விண்ணப்பப் பகுதி, மணிவாசகப் பெருமானால் 'கடையவனே' என்பதனை முதலாகக் கொண்டு தொடங்கப் பெற்றதனால், இவ் இறுதிப் பாடலின் இறுதியிலும், 'கடையவனே' என்னும் சொல் அமைந்து மண்டலித்து நிறைவு பெறுவதாயிற்று. இதன்கண் "என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்" என்றது, பிரபஞ்ச வைராக்கியம்.

## முடிவுரை :

இங்ஙனம் தொட்டனைத்தூறும் மணற்கேணிபோல, அறிஞர்களாயினார் எண்ணுதொறும் எண்ணுதொறும் பலப்பல நுண்ணிய பொருள்களை யுணர்த்திக் கொண்டு திகழ்தல், திருவாசகத்தின் இலக்கியத் திறனுக்குச் சிறந்த சான்றாகும். இத்தகைய தெய்விக நலம் சிறந்த திருவாசகத்தையும் ஒருசிலர் எளிதாக எண்ணுவர், புறக்கணிப்பர். அதனால் திருவாசகத்திற்கு ஓர் இழுக்கும் இல்லை. திருவாசகத்தை ஓதியும் ஒருசிறிதும் உருக்கம் அடையாத நெஞ்சம் உடையவர்கள் இருக்க நேருமாயின், அது திருவாசகத்தின் குறையாகாமல், அவர்களின் பண்படாத மன இயல்பினையே உணர்த்துவ

தாகும். [11] ஏனெனில்,

மலரினும் மென்மை கவிதை; சிலர் அதன்
செவ்வி தலைப்படு வார்

என்பது அறிஞர்கள் அனைவரும் கண்டறிந்த உண்மை. "எத்தனையோ பல லட்சக்கணக்கான மக்கள் உடல் உழைப்பினை மேற்கொள்ள வல்லவராயிருப்பர்; ஆனால் பத்து லட்சம் மக்களில் ஒரே ஒருவர் மட்டுமே, சீரிய சிந்தனைச் செயற்பாட்டின் திறம் வாய்ந்தவராகத் திகழ்வர்; எத்தனையோ கோடிக்கணக்கான மக்களில் ஒரே ஒருவர் மட்டும்தான், கவிதையின்பம் அல்லது தெய்விக வாழ்க்கையுணர்வு உடையவராக விளங்குவார்" [12] என்று அமெரிக்க நாட்டுத் தத்துவ ஞானியாகிய என்றி டேவிட் தோரே என்பவர் கூறியிருத்தல் இங்கு இயைபுடைமை பற்றி நாம் சிந்தித்து உணர்தற்குரியது.

திருவாசகத்தினை இராமலிங்கர், சிவப்பிரகாசர், சிவஞான முனிவர், தாயுமானவர் போன்ற எத்தனையோ பல்லாயிரக் கணக்கான மாபெரும் சான்றோர்களும் அருளாளர்களும் போற்றி ஓதி உய்ந்துள்ளனர் என்னும் உண்மையினை நாம் நூல்கள் வாயிலாக

---

(11) "Modern works have to pass before the bar of test and taste of succesive generations; whereas, with classics, which have been through the ordeal, almost the recerse is the case. Your taste has to pass before the bar of the classics. That is the point. If you differ with a classic, it is you who are wrong, and not the look".

-Arnold Bennett,
Literary Taste, How to Form it.

(12) "The millions are awake enough for a physical labour; but only one in a million is awake enough for effective intellectual expression, only one of a hundred millions to a poetic rapture or Divine life".

Henry David Thorean,
Where I lived and what I lived for.

அறிகின்றோம். எனவே, அத்தகைய அருட்பெருஞ் சான்றோர்கள் பலரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, நாமும் திருவாசகச் செந்தமிழ் மாமறையினை இடையறாது ஓதி, இறையருள்பெற்று உய்ய முயலுவோமாக!

## திருவாசகத்தின் சிறப்பு

தண்டமிழ் மொழியிற் சீர்த்தி
சான்றுயர் நூல்கள் ஆக,
எண்தரத் தக்க வற்றுள்,
எழில்**திரு வாச கம்**தான்,
திண்டிறல் **திருக்குறள்**போல்,
சிறந்த**தொல் காப்பி யம்**போல்,
விண்தொட நிவந்து நிற்கும்;
அதன்சீர்யார் விளம்ப வல்லார்? (1)

**திருக்குறள்**போல் நீதிநூல்,
சிறந்துயர்**தொல் காப்பியம்**போல்
திருத்தமிகும் இலக்கணநூல், **சிவஞான போதம்**போற்
சுருக்கமிகும் மெய்ப்பொருள்நூல், தூய**திரு வாசகம்**போல்
உருக்கமிகும் பக்திநூல், உலகினில்வே றெங்கும்உண்டோ? (2)

இரும்புதரு மனத்தினையும் ஈர்த்துருக்கி,
எழிற்பொன்னாய் இனிது மாற்றிக்,
கரும்புதரு சுவைபெருக்கிக் கனிவுவளம்
**திருவாச கம்**தான் காட்டும்;
அரும்பெருஞ்சீர் அமைந்தொளிரும் அத்திருவா
சகநூலின் அருமைப் பாட்டை
விரும்பிமிக, **இராமலிங்கர்** முதற்சான்றோர்
மிகப்புகழ்ந்து வியந்து நின்றார்! (3)

திருவா சகத்தின் பெருமையினைச்
சிறந்த **ஜீ. யூ. போப்** அவர்கள்,

ஒருவா துழைத்து மொழிபெயர்த்த
உயர்வைச் சொல்லிப் புகழ்ந்துரைப்பர்;
மருவார் அவர்தாம் ஒருவரோ?
**தாயு மானார், வள்ளலார்,**
பெருவாழ்வு **அருணை கிரி**முதலாம்
பெரியோர் எலாரும் போற்றினரே! (4)

**மறைமலை யடிகள், நாவலர் நாட்டார்,**
வண்புகழ்ப் **பண்டித மணியார்,**
துறைகலை போய **சுப்பிர மணியத்**
**தோன்றலார், ஞானியா ரடிகள்,**
முறைதிகழ் சான்றோர் **உமாமகே சுரர்,** நன்
மூதறிஞர் **திரு. வி. க.,**
பிறர்பிறர் எலாரும் பிறங்கருள் திருவா
சகம்பேணி ஓதினர் உயர்ந்தார்! (5)

தமிழக வானில் முப்பெருஞ் சைவத்
தண்ணொளிச் சுடர்களாய்த் திகழ்ந்தே,
அமிழ்துறழ் கவிகள் அளித்தருள் **குமர**
**குருபரர், சிவப்பிர காசர்,**
எமியரேம் துணையாம் இனியமா தவத்துச்
**சிவஞான சுவாமிகள்** எலாரும்,
குமிழிடும் பக்தி குருவருள் திருவா
சகத்தினிற் பெரிதும்கொண் டிருந்தார்! (6)

வித்தகம் மிகும்நம் தமிழகத் துதித்து,
மிகப்பெருஞ் சிறப்புகள் வாய்ந்து,
தத்துவத் துறையின் தலைவர்கள் என்னத்
**தகும்மெய்கண் டார், அருள் நந்தி**
மெய்த்திகழ் நூல்கள் மிகப்பல இயற்றும்
**உமாபதி சிவம்**முதல் மேலோர்,
எத்துணைப் பலரோ, எழில்திரு வாச
கத்தினை இனிதோதி உயர்ந்தார்! (7)

கல்வியிற் சிறந்து யர்ந்த **கடவுள்மா முனிவர்**, எல்லாப்
பல்வகைக் கலையும் தேர்ந்த **பரஞ்சோதி முனிவர்**, பண்பார்
நல்லியற் கவிஞர், எண்ணில் தலநூல்கள் நவின்றோர் எல்லாம்,
தொல்திரு வாசகத்தின், தூயகா தலர்கள் ஆவீர்! (8)

## (வெண்பா)

உள்ளம் உருக்கி உணர்வைச் சிவமாக்கும்
தெள்ளு தமிழ்த்திரு **வாசகம்**தான்-மெள்ளமிகு
நம்மை மலம்அறுத்து, நன்மைஎலாம் எய்துவித்துச்
செம்மையுறு விக்கும் சிறந்து.

நா. ரா. முருகவேள்



# 3

# திருவாசகமும் திருவருட்பாவும்

## முன்னுரை:

அமிழ்தினும் இனிய நமது தமிழ் மொழியின்கண் உள்ள அரும்பெறல் நூல்கள் பலவற்றுள், சமயத்துறையில் ஒப்புயர்வற்ற தொன்றெனச் சிறந்து திகழ்வது திருவாசகம். ''ஓதி ஓதி உணரும் தொறும் உணர்ச்சியுதவும்'' தெய்வநலஞ் சான்ற திருவாசகத்தின் சிறப்பிற்கு ஓர் எல்லையேயில்லை. தமிழ்நாட்டில் வாழையடி வாழையாகத் தோன்றியருளிய சான்றோர்கள் பலரும், மணிவாசகர் அருளிய திருவாசகத்தினைத் தம் உயிரினும் இனிய மிக மேலான அருளியல் நூலாகப் போற்றிப் பாராட்டியுள்ளனர்.

## இராமலிங்க அடிகளார் :

அவர்களுள் எல்லாம் தலைசிறந்த ஒருவராகத் திகழ்பவர், திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க அடிகளார் ஆவர். திருவாசகத்தின்பால், திருவருட்பிரகாச வள்ளலார் கொண்டிருந்த ஈடுபாடு, நினைத்தொறும் நினைத்தொறும் வியப்பினை விளைவிப் பதாகும். ''சாத்திரங்களில் சிறந்தது திருமூலர் திருமந்திரம்; தோத்திரங்களில் சிறந்தது திருவாசகம்'' என்பது வள்ளலார் திரு வுள்ளம். திருவாசகத்தில் மாணிக்கவாசகப் பெருமான் வெளியிட் டருளிய சிவானுபவத் திறங்களைத் தாமும் ஒரு சிறிதாவது அனுபவித்து உய்தல் வேண்டும் என்பது அடிகளின் வேணவா.

> தேசகத்தில் இனிக்கின்ற தெள்ளமுதே! மாணிக்க
> வாசகனே! ஆனந்த வடிவான மாதவனே!
> மாசகன்ற நீ, திருவாய் மலர்ந்ததமிழ் மாமறையின்
> ஆசகன்ற அனுபவம்நான் அனுபவிக்க அருளுதியே!

## திருவாசக இன்பம் :

திருவாசகத் திருமறையினை ஓதும்பொழுதெல்லாம், தாம்பெற்ற இன்ப அநுபவம், "கற்பிற் சிறந்த கன்னிப்பெண் ஒருத்தி, தான் காதலித்து மணந்துகொள்ள இருக்கும் கணவனின் ஒப்புயர்வற்ற அழகையும், குண நலன்களையும் எல்லாம் பற்றித் தனது அரும்பெறல் ஆருயிர்த் தோழி ஒருத்தி ஆராய்ந்து அறிந்து வந்து புகழ்ந் துரைக்கக் கேட்கும்போது, எத்தகைய இன்பத்தை அடைந்து மகிழ்வாளோ, அத்தகைய ஒரு சிறந்த இன்ப அநுபவத்திலும் மேலானது" என்று இனிதெடுத்து இயம்பி மகிழ்கின்றார் இராமலிங்க அடிகளார்.

> சேமமிகும் திருவாத வூர்த்தேவுஎன்று, உலகுபுகழ்
> மாமணியே! நீ உரைத்த வாசகத்தை எண்ணுதொறும்,
> காமமிகு காதலன்தன் கலவிதனைக் கருதுகின்ற,
> ஏமமுறு கற்புடையாள் இன்பினும்இன் பெய்துவலே.

இதன்கண் இராமலிங்க அடிகளார், தம்மை ஒரு கற்பிற் சிறந்த காதற் கன்னிப் பெண் ஆகவும்; சிவபெருமானை அக்காதற் கன்னிப் பெண் காதலித்துக் கடிமணம் புரிந்து கொள்ள விரும்பும் கணவனாகவும்; மணிவாசகப் பெருந்தகையைத் தம் உள்ளத் திற்கியைந்த உணர்ச்சியொத்த உயிரினும் இனிய தோழியாகவும்; அம்மணிவாசகர் சிவபெருமானின் பலவகைச் சிறப்புகளையும் பண்பு நலன்களையும் தண்ணளித் திறன்களையும் புகழ்ந்து போற்றிப் பாடுவதை, ஒருகாதற் கன்னிப் பெண்ணுக்கு, அவள் மணக்கப்போகும் காதற் கணவனின் அழகையும் குண நலன்களையும் பற்றித் தோழி விவரித்துரைத்து மகிழ்ச்சி விளைவிப்பதாகவும், உருவகம் செய்து பாடுகின்றார். இதனால், அவர் திருவாசகத் தின்பாற் கொண்டிருந்த பெரும்பற்று இனைத்தென நாம் எண்ணி உணரலாம்.

## திருவருட்பா :

திருவாசகத்தை ஓதி ஓதி மகிழ்ந்து தாம்பெற்ற இறையருள் இன்ப அநுபவ நலனையே, இராமலிங்க அடிகளார் தமது திருவருட்பாவில் விரித்துரைத்து விளக்கிப் பாடியிருக்கின்றார்

எளலாம். திருவாசகத்தின் எளிமை இனிமை தெளிவு உருக்கம் தெய்விகம் ஆகிய பண்புநலன்கள், திருவருட்பாவிலும் சிறப்புற அமைந்து ஒளிமிக்குத் திகழ்கின்றன. ஓதுவோர் உள்ளங்களை யெல்லாம் திருவாசகம் உருக்கிக் கொள்ளை கொள்ளுதல்போல, இராமலிங்க அடிகள் அருளிய திருவருட்பாவும், கல்லாரும் கற்றோரு மாகிய எல்லோருடைய உள்ளங்களையும் கவர்ந்து ஈர்த்து உருக்கிக் கொள்ளை கொள்ளுகின்றது. திருவாசகக் கருத்துக்களையும் சொற்கள் சொற்றொடர்களையும் திருவருட்பிரகாச வள்ளலார் தம்முடைய திருவருட்பாவில் ஆங்காங்கே பெரிதும் போற்றி அமைத்துப் பாடியருளியிருக்கக் காண்கின்றோம். இவ்வுண்மைக்கு உரிய ஒரு சில சான்றுகளை மட்டும் இங்கு இயன்ற அளவு சுருக்க மாகக் காண்போம்.

## 1. எந்தை எழுத்து ஐந்தே:

திருவாசகம் 'நமச்சிவாய வாழ்க' என்று தொடங்குகின்றது. அந்நமச்சிவாய மந்திரத்தின் இயல்புகலளயெல்லாம், திருவருட் பிரகாச வள்ளலார் திருவருட்பாவில் ஆங்காங்கே வியந்து போற்றி இன்புறுகின்றார். "நமச்சிவாயம் காண், நாம் பெறுந் துணையே" என்றும், "சிவாயநம என்று இடு நீறே" என்றும், இனிய தொடர் கள் ஈற்றில் அமைந்த பதிகங்கள் பலவற்றை, நாம் திருவருட்பாவில் காணலாம். பேராயிரம் உடைய பெருமானாகிய இறைவனுக்கு உரிய மூலமந்திரம், அவனுடைய எல்லையற்ற பெருமைக்கு ஏற்ப, மிகப்பல ஆயிரம் எழுத்துக்களாலோ, அல்லது நூறுபல எழுத்துக் களாலோ, மிக நீண்டதாக இல்லாமல் நம்மனோர் அனைவரும் எளிதில் ஓதி உய்தற்பொருட்டு ஐந்தே எழுத்துக்களால் அமைந்துள்ள திறன், மிகவும் வியந்து போற்றுதற்குரிய தொன்றன்றோ? என, இராமலிங்க அடிகளார் இறும்பூசெய்துகின்றார்.

"ஆயிரம்அன் றேநூறும் அன்றேஈ ரைந்தன்றே
ஆயிரம்பேர் எந்தைஎழுத் தைந்தேகாண் – நீயிரவும்
என்றும் நினைத்தியென ஏத்துகினும், எந்தாய்வீண்
செல்லுமனம் என்செய்கேன் செப்பு"

எனவரும் திருவருட்பாச் சிவநேச வெண்பா, நாம் சிந்தித்து இன்புறற்பாலது.

## 2. பிஞ்ஞகன் :

திருவாசகத்தின் தொடக்கத்தில் அமைந்துள்ள சிவபுராணம் என்னும் பகுதியில், ''பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க'' என்னும் வரியினை நாம் அனைவரும் நன்கறிவோம். திருவாசகத்தின் ஒவ்வொரு சொல்லையும் சொற்றொடரையும் ஆழ்ந்து ஆராய்ந்து உணர்ந்தவராகிய வள்ளலார், இவ்வரியில் வரும் பிஞ்ஞகன் என்னும் சொல்லை நீள நினைந்துணர்ந்து சிந்தித்துப் போற்றியருள்கின்றார். 'பிஞ்ஞகன்' என்னும் சொல் ஞகரம் ஆகிய மெல்லின எழுத்தில் அமைந்து திகழ்கின்றது. இறைவனுக்குரிய திருப்பெயர்களுள், மெல்லின எழுத்தில் அமைந்த பிஞ்ஞகன் என்னும் சொல்லை ஒலிப்பதனால், மெல்லின எழுத்துக்கள் பிறந்து ஒலிப்பதற் குரிய நம்முடைய மூக்கு புனிதமுற்றுச் சிறப்பு எய்துகின்றது. இல்லையேல், மூக்கின் துளைகள் எச்சிறப்பும் பயனும் அற்று, அழுக்குகள் வடிகின்ற சாக்கடைத் துளைகளுக்கும், பாம்புகள் உள்ளும் புறம்பும் செல்கின்ற புற்றின் துளைகளுக்கும், பசுமட் பாண்டங்களின் துளைகளுக்குமே சமமாகும் என்பது வள்ளலார் கூற்று.

> ''புல்அங் கணநீர்ப் புழைஎன்கோ? புற்றென்கோ?
> சொல்லும் பசுமண் துளையென்கோ? – வெல்லுஞ்சீர்
> வீயாத பிஞ்ஞகப்பேர் மெல்லினத்தில் நல்லிசைதான்
> தோயாத நாசித் துளை''

எனவரும் திருவருட்பாப் பாடல், திருவாசகத்தில் வரும் பிஞ்ஞகன் என்னும் சொல்லில் இராமலிங்க அடிகளார் எவ்வளவு ஈடுபட்டுச் சிந்தித்திருக்கின்றார் என்பதனைத் தெற்றென வுணர்த்தும்.

## 3. அறம்பாவம் எனும் அருங்கயிறு :

இவ்வாறே, சிவபுராணப்பகுதியில், ''அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி'' என்னும் அழகிய தொடர் வருகின்றது.

இவ்வழகிய இனிய தொடரின் பொருளை அழுந்திச் சிந்தித்து ஈடு பட்டு நின்ற இராமலிங்க அடிகளார்,

**தீவினை நல் வினை எனும்வன் கயிற்றால் இந்தச்**
**சீவர்களை ஆட்டுகின்ற தேவே! நாயேன்**
ஏவினைநேர் கண்மடவார் மையற் பேயால்
இடருழந்தும் சலிப்பின்றி, என்னே இன்னும்
நாவினைஎன் பால்வருந்திக் கறண்டு கின்ற
நாய்க்கும்நகை தோன்றநின்று நயக்கின் றேன்;நான்
ஆவினைவிட் டெருதுகறந் திடுவான் செல்லும்
அறிவிலிக்கும் அறிவிலியேன் ஆன வாறே!

எனவரும் மகாதேவ மாலைச் செய்யுள் (36) முதலடிகளில், அவ் வரியின் கருத்தினை அமைத்துப் பாடியிருத்தல் காணலாம்.

## 4. மூர்க்கனும் முதலையும்:

திருவாசகத்தில் போற்றித் திருவகவல் என்னும் பகுதியில் "கொடிறும் பேதையும் கொண்டது விடா" என்னும் உலகியற் பழமொழி ஒன்று பயின்று வருகிறது. அவ்வரியின் அரும்பொருளில் ஆழ்ந்து ஈடுபட்ட அடிகளார், "முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா என்று பெரியோர்கள் கூறுவர். மூடனாகிய யான் நின் திருப்பெயரை நன்றாகக் கூறிவந்தேன். ஆயினும், அதனையே உறுதியாகக் கடைப்பிடித்துக் கொள்ளாமல், இடையிற் கைவிட்டு மறந்திருக்கின்றேன். நாணமற்ற என்வரையில் அந்தப் பழமொழி ஒருவகையில் பொய்த்துவிட்டது போலும்" என்னும் கருத்து அமைய, மேலைத்திருவாசக வரியின் பொருளைப் பின்வரும் திருவருட்பாச் செய்யுளில் அமைத்திருத்தல் காணலாம்:

**வென்றே முதலையும் மூர்க்கரும்**
**கொண்டது மீளவிடார்**
என்றே உரைப்பர்; இங்கு என்போன்ற
மூடர் மற்றில்லை; நின்பேர்

நன்றே யுரைத்துநின்று அன்றே
விடுத்தனன்; நாணில் என்மட்டு
இன்றேஅக் கட்டுரை இன்றே,
என் சொல்வது? இறையவனே!

## 5. நச்சுமா மரம் :

திருவாசகத்தில் திருச்சதகம் என்பது ஒரு சிறந்த பகுதி. திருப் பெருந்துறையில் குருந்தமர நிழலில் தம்மை ஆட்கொண்டருளி மறைந்த ஞானாசிரியராகிய சிவபெருமானைப் பிரிந்த பிரிவாற்றா மையால் விளைந்த துயர மேலீட்டால், மாணிக்கவாசகர் பாடிய நூறு பாடல்களைக்கொண்ட பகுதியே, திருச்சதகம் என்பர். துயரம் மிக்க நினைவுகளைப் பற்றிச்சொல்லும் கவிதைகளே, மிகவும் இனிமை வாய்ந்த கவிதைகள் ஆகும் ("The sweetest songs are those that tell of saddest thoughts" - P. B. Shelley) என்று அறிஞர்கள் கூறுவதுண்டு. அதன்படி, ஞானாசிரியரின் பிரிவாகிய துயர மேலீட்டால் அருளிச் செய்யப்பெற்ற திருச்சதகப் பாடல்களின் சிறப்பும் இனிமையும் பெரிதும் போற்றத்தக்கவை.

அதன்கண் ஒரு பாடலில் மாணிக்கவாசகர், "விதையில்லாமலே விளைவு செய்பவனே! விண்ணும் மண்ணுமாகிய எல்லா உலகங் களையும் தோற்றிக் காத்து ஒடுக்குபவனே! வஞ்சகப் பெரும் புலையனாகிய என்னை, உன் கோயில் வாயிலில் இருக்கும் பிச்சனாக்கினாய்! என்னைப் பெரிய அன்பருக்கு உரியனாக்கினாய்! தாம் நல்லதென்று கருதி வைத்தது, பின்னர் ஒரு பெரிய நச்சு மரமாக மாறினாலும் வைத்து வளர்த்தவர்களே அதனை வெட்டி அழித்தொழிக்க முற்படமாட்டார்கள். ஆதலின் என்னைத் தோற்று வித்த நீயே, நான் எத்துணைக் கொடியவனாயினும், என்னை ஒறுத்து அழிக்க முற்படாமல் காத்தருளல் வேண்டும்" என இறைவனிடம் வேண்டிக் கொள்ளுகின்றார். "தாம் வளர்த்த தோர் நச்சு மாமரம் ஆயினும் கொலார்; நானும் அங்ஙனே உடைய நாதனே" எனவரும் திருவாசக வரியின் பொருளில் அழுந்திய இராமலிங்க அடிகளார்,

''எச்சம் பெறுமுலகோர் எட்டிமரம் ஆனாலும்
பச்சென் றிருக்கப் பகர்வர்காண் – வெச்சென்ற
நஞ்சனையேன் குற்றமெலாம் நாடாது நாதஎனை
அஞ்சல்நையேல் என்பாய் அமர்ந்து" என்றும்,

**"பாம்பாயினும் உணைப் பால்கொடுப்பார்;**
வளர்ப்பார்; மனைப்பால்
**வேம்பாயினும் வெட்டல் செய்யார்;**
வளர்த்த வெருட்சிக் கடாத்
தாம்பாயினும், ஒரு தாம்புஆயினும்
கொடு, தாம் பின்செல்வார்;
தேம்பாய் மலர்க்குழற்கு ஆம்பாக;
என்னையும் சேர்த்துக் கொள்ளே'' என்றும்

வரும் திருவருட்பாப் பாடல்களில், அத் திருவாசக வரியின் கருத்தினைத் தழுவிப் போற்றி அமைத்திருத்தல்,அறிந்து மகிழ்தற்குரியது.

## 6. பட்டி மண்டபம் ஏற்றினை :

மாணிக்கவாசகர், தம்மை இறைவன் கட்டறுத்து ஆண்டு கொண்டான்; கண்ணார நீறிட்ட அன்பர்களும் பிறரும் காணும்படி எட்டும் இரண்டும் கூடச் சேர்த்து எண்ணத் தெரியாத இழிந்த தம்மை, உயர்ந்த புலவர்கள் கூடி ஆராய்ச்சிச் சொற்போர்கள் நிகழ்த்துகின்ற பட்டிமண்டபத்தில் ஏறவைத்துவிட்டான் என்கிறார். தமக்கு இறைவன் செய்த அருள் நலத்தினைப் 'பட்டிமண்டபம் ஏற்றினை ஏற்றினை'' என்றும், தம்முடைய தகுதியற்ற தன்மையினை "எட்டினோடு இரண்டும் அறியேன்" என்றும், மணிவாசகர் குறிப்பிட்டிருக்கும் திறன், நெஞ்சையள்ளும் சிறப்புமிக்க செஞ்சொல்வரிகளாகும். இவ்வரிகளில் ஈடுபட்ட வள்ளலார் **'எட்டிரண்டும் என்? என்றால் மயங்கிய என்றனக்கே எட்டாத நிலையெல்லாம் எட்டுவித்த குருவே"** - '' "ஓதியுணர்ந்தவர் எல்லாம் எனைக் கேட்க எனைத் தான் ஓதாமல் உணர்ந்து உணர்வுறச்செய் உறவே" - "நாட்டார்கள் சூழ்ந்து மதித்திட மணிமேடையிலே நடுவிருக்க என்றனையே நாட்டிய பேசிறைவா'' என்றெல்லாம் பலவாறு போற்றிப் பாடியருளியிருக்கின்றார்.

## 7. திருவெம்பாவை:

திருவாசகத்தில் வரும் திருவெம்பாவை என்னும் பகுதியின் சிறப்பை அனைவரும் அறிவர். இராமலிங்க அடிகளார் அதன்கண் தனிச்சிறப்பான ஈடுபாடு கொண்டிருத்தல் வேண்டும். "அருட் பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை" என வள்ளலார் எழுப்பிய அருள் முழக்கம், **"கேழில் பரஞ்சோதி கேழில் பரங் கருணை"** என்னும் திருவெம்பாவை வரியினையே அடிஒற்றி அமைந்ததாகத் தெரிகின்றது. மேலும், திருவெம்பாவை வரிகளுள் "ஓத உலவா ஒரு தோழன் தொண்டர் உளன்" என்பது ஒரு சிறந்த வரியாகும். இதன்கண்வரும் "தோழன்" என்னும் சொல் சுந்தரரைக் குறித்ததாகல் வேண்டும் என அறிஞர்கள் சிலர் கூறுவர். மற்றுஞ் சில ஆராய்ச்சியாளர்களோ, அற்றன்று; தோழம் என்பது எண்ணற்ற பல கோடிகளைக் கொண்ட ஒரு பேரெண் என்பர். இத்தகைய ஆராய்ச்சிக் கருத்துக்களுக்கு அடிப்படையும் நிலைக் களமுமாக அமைந்த அத் திருவாசக வரியினை, வள்ளலார் தமது திருவருட்பாவில்,

> **"ஓதவுலவா ஒருதோழம் தொண்டருளன்,**
> சாதல் ஒழித்தென்னைத் தானாக்கிப் பூதலத்தில்
> ஐந்தொழில் செய்கென்றே அருட்சோதிக் கோல்அளித்தான்,
> வெந்தொழில் போய் நீங்க விரைந்து"

என்னும் பாடலில் முழுவதாகத் தழுவி எடுத்துப் போற்றி அமைத்துக் கொண்டிருக்கும் திறம், சிந்தித்து இன்புறுதற்குரியது.

## 8. பேதித்து வளர்த்த பெய்வளை :

திருவெம்பாவையின்கண் போதரும் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை தன் பாதத் திறம்பாடி" என்னும் வரி, அனைவரும் அறிந்ததொன்று; அது மிகவும் பொருட் சிறப்பு வாய்ந்தது. அம்பிகையே மறைப்பாற்றல் என்னும் திரோதான சக்தியாகவும், அருளாற்றல் என்னும் அநுக்கிரக சக்தியாகவும் அமைந்து விளங்கும் திறனை, இவ்வரி விளக்குவதாகப் பெரியோர் கள் கூறுவர். திரோதான சக்தியானது, ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும், தத்தம் தொழில்களை உயிர்கள்பால்

இயற்றுமாறு' ஏவுகின்ற சக்தி என்று சிவஞானசித்தியார் (சு., 2-87) கூறும். திரோதை எனப்படும் அச்சக்தி, உயிர்கள் உலகியலில் அழுந்தி வினைகளை நுகருங்கால் இருளாக இயக்கியும், வினை களின் நீங்கித் தூய்மை அடைந்து உயிர்கள் அருளியலில் ஈடுபடுங் கால் ஒளியாக மாறித் தெளிவு நல்கியும் நிற்கும். "முற்சினம் மருவு **திரோதாயி** கருணையாகித் திருந்திய சத்திநிபாதம் திகழும் அன்றே" என்பது சிவப்பிரகாசம் (30). இங்ஙனம் திரோதை என்னும் சக்தி, முதலில் இருளாக இருந்த உயிர்களுக்கு வினையை நுகர்வித்தும், பின்னர் ஒளியாக மாறி உயிர்களை அருளியலில் செலுத்திச் சிவத்தை நுகர்வித்தும் நலம்புரியும் திறனையே, "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" என்னும் அழகியதொடர் அறிவுறுப்பதாகப் பெரியோர்கள் கூறுவர். 'மதுரைச் சிவப்பிரகாசர்' என்னும் சைவசித்தாந்தப் பேருரை ஆசிரியர், 'சிவப்பிரகாசம்' என்னும் நூலுக்குத் தாம் வரைந்த விரிவுரையில் திரோதான சக்தி பற்றிய செய்யுட்கண் (71), உரிய அரிய மேற்கோளாக இவ்வரியினை எடுத்துக் காட்டியிருக் கின்றார். பொருள்நலம் பொதிந்த இச்சிறந்த அழகிய வரியின் பொருளில் ஈடுபட்ட வடலூர் வள்ளலார்,

> "**அம்மை திரோதை அகன்றாள்**; எனைவிரும்பி
> அம்மைஅருட்சக்தி அடைந்தனளே – இம்மையிலே
> மாமாயை நீங்கினள்; பொன்வண்ண வடிவு உற்றது
> என்றும் சாமாறு இலை தான்"

என்ற திருவருட்பாவில், அதனைத்தழுவி அருளிச் செய்திருத்தல், அறிஞர்களுக்கெல்லாம் ஆராப் பெருவிருந்தாகும்.

## 9. வன்பராய் முருடு :

மாணிக்கவாசகர் இறைவன் தமக்குச் செய்த இன்னருட்டிறனை வியந்து பின்வருமாறு போற்றுகின்றார்; "திருப்பெருந்துறை மேவிய சிவனே; தென்பராய்த் துறையில் உறைபவனே; சிவ லோகத்தில் விளங்குபவனே; உனக்கு அன்புடையவர்களாய் உன்னை அடைவதற்காக அரிய தவத்தினைப் புரிபவர்களும், அயனும் மாலும், மற்றும் அழலிற்பட்ட மெழுகுபோல உன்னை நினைந்து உருகுபவர்களும், உடல் இளைத்து என்பெழுந்து

தோன்றும்படி உனக்குப் பணி செய்து தியானிப்பவர்களும், ஆகிய எத்தனையோ பலர் இருக்கும்பொழுது, இங்கு என்னை எது குறித்துக் கருணையுடன் ஆண்டுகொண்டாய்? என் சிந்தை வன்பராய் முருடு ஒக்கும், என் கண்கள் மரக்கண்கள், என் செவியோ இரும்பினும் வலியது'' (371) என்னும் கருத்தமைய மாணிக்கவாசகர் பாடியுள்ள திருவாசகம், எவருள்ளத்தையும் உருக்க வல்லதாகும். இதன்கண் வரும் ''வன்பராய் முருடு ஒக்கும் என்சிந்தை; மரக்கண்; என்செவி இரும்பினும் வலிது'' என்னும் வரிகள், இராமலிங்க வள்ளலாரின் உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண்டன போலும்!

அதனால்தான், அவர் தாம் பாடிய மகாதேவமாலையின்கண் (92), ''பொன்மலையோ சிறிது எனப் பேராசை பொங்கிப், புவி நடையிற் பற்பல காற் போந்து போந்து, நென்மலையோ நிதி மலையோ என்று தேடி நிலைகுலைந்ததன்றி உனை நினைந்து நேடி, மன்மலையோ மாமணியோ மருந்தோ என்று வழுத்தியது இல்லை; இந்த வஞ்ச நெஞ்சம், தன்மலையோ - இரும்போ - செம்மரமோ - பாறைக் கருங்கல்லோ, **பராய் முருட்டுக் கட்டையோ''** என்று பாடியிருக்கின்றார். கோணலும் மாணலு மான முடிச்சுக்கள் பல நிறைந்து, கோடரியாலும் பிளக்க முடியாத தாய், மிக்ககடினம் வாய்ந்த பராய் மரத்தின் முருட்டுக் கட்டை யினை, உருக்கம் சிறிதும் அற்ற கடின உள்ளத்திற்குத் தக்க உவமையாக மாணிக்கவாசகர் குறிப்பிட்டருளிய சிறப்பினை, இராமலிங்க வள்ளலார் இனிதெடுத்துத் தமது பாடலில் போற்றிக் கொண்டுள்ள திறம், பெரிதும் போற்றி மகிழ்தற்குரியது.

## 10. ஒறுத்தால் ஒன்றும் போதும் :

திருவாசகத்தில் வரும் பதிகங்களுள் 'குழைத்தபத்து' என்பது ஒன்று. அஃது 'ஆத்தும நிவேதனம்' என்னும் அரிய பெரிய கருத் தினை உட்கொண்டு இருப்பதாகப் பெரியோர்கள் கூறுவர். அதன்கண், மாணிக்கவாசகர் இறைவனைப் பெரிதும் போற்றிப் பணிந்து, பின்வருமாறு விண்ணப்பித்துக் கொள்ளுகின்றார். ''கொடி போலும் இடையை உடைய அம்மையை ஒருபாகத்துக் கொண்ட

வனே! எங்களுடைய தலைவனே! அடியேனுடைய அல்லல்கள் எல்லாம் அகலும்படி, முன்னரே என்னை ஆண்டுகொண்டாய் என்று யான் நம்பி இருந்தேன். எங்கள் சிவலோகனே! ஆவா (ஐயோ பாவம்) என்று அருளி, என்பால் இரக்கங் கொண்டு, நீ என்னுடைய தீமை நிறைந்த உடலைச் சிதைத்துப் போக்கி யருளாமல் இருப்பது எதற்காக? என்னை உடைய தலைவனே! எனக்கு அருள்செய்து நலங்கள் பலவும்புரிந்து, நீ என்பாற் பணி கொள்ளாது ஒழியினும், என்னைக் கூவி அழைத்து' நீ கடுமை யாகத் தண்டித்தால், அத்தண்டனையும்கூட, எனக்கு மகிழ்ச்சியும் ஆறுதலும் அளிக்கப் போதியதாகும்! அருள் செய்யாமற் போயினும் கடிய கொடிய தண்டனையையாவது எனக்கு நீ தரலாகாதா?'' என மணிவாசகர் குழைத்தபதிகத்தில் பாடியிருப்பது, எவருள்ளத் தையும் உருக்கிக் குழைவிக்க வல்லதாகும்.

சிறந்த இந்தத் திருவாசகப் பாடலின் கருத்தினைத் தழுவி, இராமலிங்க அடிகளார் தாம் பாடிய திருவருள் முறையீடு (174) என்னும் பகுதியில்,

> ''சோபம் கண்டார்க்கு அருள்செய்வோம்;
> மதிக்கன்றிச் சூழ்ந்திடுவெம்
> தீபம் கண்டாலும் இருள்போம்;
> இவ்ஏழை தியங்கும்பரி
> தாபம் கண்டாய்; அருள் செய்யாது
> **என் குற்றம் தனைக்குறித்துக்**
> **கோபம்கொண்டாலும்நன்று, ஐயா!**
> **என் துன்பக் கொதிப்பு அறுமே''**

என்று அழகுறப் பாடியிருத்தல் அனைவர் உள்ளத்தையும் உருக்கி மகிழ்விக்கத் தக்கதாகும். ''உடையாய் கூவிப்பணி கொள்ளாது ஒறுத்தால் ஒன்றும் போதுமே'' எனவரும் திருவாசக வரியினை அடியொற்றி ''என் குற்றம் தனைக் குறித்துக் கோபம் கொண் டாலும், நன்று ஐயா! என் துன்பக் கொதிப்பறுமே'' எனவரும் திருவருட்பா வரி அமைந்திருக்கும் ஒற்றுமை நயம் கற்றுணர்ந் தோர்க்கு எல்லாம் கழிபெரும் உவகையினைப் பயக்க வல்லதாகும்.

## முடிவுரை :

இத்தகைய பல அருமையான ஒப்புமைக் கருத்துக்கள் எத்தனையோ பல, திருவாசகத்திலும் திருவருட்பாவிலும் காணக் கிடக்கின்றன. திருவாசகமே திருவருட்பாவாகச் சிறப்புற அமைந்தது; திருவாசகத்திற்கு ஒருவகையில் விரிவுரை போல விளங்குவதே திருவருட்பா என்பன போன்ற செவ்விய உண்மைகளை, இவ்வாற்றால் நாம் உன்னி உணரலாம். சன்மார்க்கநெறிச் சான்றோர்களாகிய மாணிக்கவாசகரும், இராமலிங்க வள்ளலாரும் அருளிச் செய்த திருவாசகம், திருவருட்பா என்னும் இருபெரு நூல்களும், ஈடு இணையற்ற தெய்விக அருள் நூல்களாகும். அவற்றை நாம் அன்புடன் இடையறாது ஓதி இறைவனை வழிபட்டு, இம்மை மறுமை நலங்களையெல்லாம் எய்தி இன்புற்று உய்வோமாக!



# 4

# திருவாசகமும் திருக்கோவையாரும்

## முன்னுரை :

மணிவாசகப் பெருமான் அருளிச்செய்த நூல்களுள், திருவாசகம் ஒன்றையே பலரும் பொதுவாக அறிந்திருப்பர். ஆனால் அப் பெருந்தகையாரே திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் பிறிதொரு சிறந்த தெய்விக நூலையும் அருளிச் செய்துள்ளார் என்பது, கற்றறிந்த சிலருக்கே தெரிந்திருத்தல் கூடும். திருவாசகம் சிறந்ததொரு தெய்விகப் பெருநூல் என்றால், அதனைச் சார்ந்து எழுந்த திருச்சிற்றம்பலக் கோவையாரும், மிகச் சிறந்ததொரு தெய்விக ஞானப் பெருநூல் ஆகும். "பாவை பாடிய வாயால் கோவை பாடுக" எனச் சிவபெருமானே, மணிவாசகப் பெருமானை இரந்து வேண்டிப்பெற்ற, இணையற்ற பெருஞ் சிறப்புடையது, திருச்சிற்றம்பலக் கோவையார்.

## திருவாசகமும் திருக்கோவையாரும்:

1. திருவாசகம், மாணிக்கவாசகரது அயரா அன்பின் திறனை விளக்குகின்றது; திருச்சிற்றம்பலக் கோவையார், அவர்தம் அரிய பெரிய புலமை நலத்தின் பெற்றிமையினைத் திறம்படப் புலப்படுத்து கின்றது.

2. சிவபெருமானின் அருள் நலங்களைப் புகழ்ந்து பாடிப் போற்றுகின்றது திருவாசகம்; நமது அருமைச்செந்தமிழ் மொழியின் சீரிய அகப்பொருள் இலக்கணங்களை அழகுறத் தெளித்துணர்த்தித் தேற்றுகின்றது, திருச்சிற்றம்பலக் கோவையார். திருவாசகம் சிவநெறித் திருநூல்; திருச்சிற்றம்பலக் கோவையார் செந்தமிழ் மொழிப் பெருநூல்!

3. திருவாசகம் தெவிட்டாத தேனையனைய சிறப்பினதெனின், திருச்சிற்றம்பலக் கோவையார் அத்தேனிடை ஊறிய தெய்வநலம் சிறந்த செந்தமிழ் அமிழ்தம் போல்வதாகும்.

4. மாணிக்கவாசகர், தமது திருவாசகச் செழும் பாடல்களில், "பூண்ட ஐம்புலனிற் புலப்படா இன்பம் புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்கும்" சிவானுபவ உணர்ச்சித் திறங்களை வெளியிட்டு அருளினார்.

இங்ஙனம், தாம் ஒருவர் மட்டுமே தம் தனி நிலையில் நுகர்ந்து உணர்ந்த, ஐம்பொறியளவிற் புலப்படாச் செம்பொருள் அருளனுபவ இன்ப உணர்ச்சிகளை, அவை இயல்பாகத் தாமே தம் உள்ளத்தில் பொங்கி எழுந்து வழிந்தவாறு, திருவாசகமாகத் திருவாய் மலர்ந்தருளிய மாணிக்கவாசகர், அச்சிவானுபவ அருளின்ப நல உணர்வுகளை, ஏனைய மக்களாயினர்க் கெல்லாமும் எடுத்துரைத்து உணர்த்தி, அவர் தம்மையும் அப்பேரின்ப நலம் தலைப்படுமாறு செய்வித்தற் பொருட்டு,

"பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன்எதிரச் சொன்ன பக்கம்"

போலப் பல்லாற்றானும் "மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்து கொண்டு, இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்" என்ற முறையில் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் பெருங் கருணையினால், 'பேதையைக் காதல் காட்டிக் கைவிடுக்க' என்னும் நுட்பம் அறிந்து, கடுத்தின்னாதானைக் கட்டி பூசிக் கடுத் தீற்றுமாறு போல, (கசப்பு மருந்தை, மேலே இனிப்புப் பூசி உண்பித்தல் போல) நாம் அறியப்பெறாத உரிய கடவுளின்ப நலத்தினை, நாம் அறிந்து எளிய காதலின்பச் செய்தியின்கண் வைத்துப் பிணைத்து விளக்கிப் பாடும் விழுமிய பெருந் தெய்விக நூலே, திருச்சிற்றம்பலப் கோவையார் ஆகும்.

## காமஞ்சான்ற ஞானப் பனுவல்:

திருச்சிற்றம்பலக் கோவையாரின் அளப்பரும் சிறப்பினை எல்லாம் விளக்கமுறச் சுருங்கிய முறையில் குறிப்பிடும் "காமஞ் சான்ற ஞானப் பனுவல்" என்னும் அரும் பொருட் சொற்றொடர்,

செந்தில் முருகன் திருவருள் பெற்றுக் கந்தர் கலிவெண்பா என்னும் செந்தமிழ்த் துதி நூலைப் பாடியருளிய குமரகுருபர அடிகளார் இயற்றியருளிய சிதம்பர மும்மணிக்கோவை என்னும் நூலின்கண்,

> ''கடங்கலுழ் கலுழிக் களிநல் யானை
> மடங்கலந் துப்பின் மானவேல் வழுதிக்கு,
> இருநிலம் அகழ்ந்தும் எண்ணில்பல் காலம்
> ஒருவன் காணாது ஒளித்திருந் தோயை,
> வனசப் புத்தேள் மணிநாப் பந்திக்
> கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்
> பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்,
> ஐந்திணை யுறுப்பின் நாற்பொருள் பயக்கும்
> காமம் சான்ற ஞானப் பனுவற்குப்
> பொருள்எனச் சுட்டிய ஒருபெருஞ் செல்வ!''

எனவரும் பாடற்கண் வருவதாகும். அதன்கண் குமரகுருபரர், மாணிக்கவாசகர், தாம் அருளிச் செய்த திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் இரு பெருநூற்கும் உண்மைப் பொருளாவார் அம்பலவாணரே எனச் சுட்டிச் சென்றமையினையும், பாண்டிய வேந்தனுக்கு மாலும் அயனுமே காணமாட்டாத இறைவனை வேதப் புரவியின்மேல் வாதுவனாகப் போதரக்காட்டி அவனை உய்வித்த சிறப்பையும் புகழ்ந்தெடுத்துப் பாராட்டி, மாணிக்க வாசகரைச் 'செந்நாப்புலவன்' எனச் சிறப்பித்தும், திருவாசகத் தினைப் 'பைந்தமிழ்' எனப் போற்றியும் திருச்சிற்றம்பலக் கோவையாரை 'ஐந்திணையுறுப்பின் நாற்பொருள் பயக்கும் காமம் சான்ற ஞானப்பனுவல்' என விதந்து கூறியும் மகிழ்ந்தின்புறு கின்றார்.

இந்நூலின்கண் காமச்சுவையும் ஞானப்பொருளும் பிரிவற விரவிக் கலந்திருக்கும் பெற்றியினைத் 'தாலிபுலாகநயம்' பற்றி ஒரு சில பாடல்களின் துணைகொண்டு, ஈண்டு இயன்ற பெற்றி சுருக்க மாக ஒரு சிறிது உணர முயலுவோமாக!

## 1. உயிர்என வியத்தல்:

அகப்பொருள் நூல்களில் 'உயிர்என வியத்தல்' என்பது ஒரு முறை. தலைவன் ஒரு பொழிலின்கண் தலைவியைக் கண்டு இன்பச் சிறப்பும் பிரியலாகாமையும் பற்றி அவளைத் தன் உயிர் எனப் பாராட்டி மகிழ்வதாகப் பாடப்பெறுவது அத்துறைக்குரிய பொருள். அதன்கண், மாணிக்கவாசகர் தம் உயிர்க்குயிராக விளங்கும் சிவ பெருமானின் செயல்களைப் பற்றிய குறிப்பும் அமையப் பாடியருள் கின்றார்.

"நேயத்த தாய்,நென்னல் என்னைப் புணர்ந்துநெஞ் சம்நெகப்போய்
ஆயத்ததாய் அமிழ் தாய்,அணங் காய்அதன் அம்பலம்போல்
தேயத்த தாய்,என்றன் சிந்தைய தாய்த், தெரி யிற்பெரிதும்
மாயத்த தாகி, இதோவந்து நின்றதென் மன்னுயிரே?"

என்னும் திருச்சிற்றம்பலக் கோவையார் பாடலில், அத்துறைக்குரிய அகப்பொருட் கருத்தே யன்றி,

"என்பால் அருள் உடையதாய் முன்னர் என்னை ஆட்கொண்டு, பின்னர் என் நெஞ்சம் கலங்கி வருந்தும்படி அடியார் திரளுடன் பிரிந்து சென்று, நினைக்குந்தோறும் அமிழ்தம் போல இன்பம் செய்து, கட்புலனாகாது மறைந்து நிற்றலின் துன்பம் செய்து, தில்லையம்பலம் போலும் பிற நல்ல தலங்களிலும் விளங்கி, என் மனத்தின் கண்ணே நிறைபெற்று, இங்ஙனமெல்லாம் மாயத் தன்மை வாய்ந்து, எனது நிலைபெறும் உயிர் (சிவம்) இதோ வந்து தோன்றா நிற்கின்றது"

என்னும் பிறிதோர் அரிய கருத்தும் அமைந்திருத்தல் காணலாம்.

## 2. மறைமுகக் கூற்று:

தோழி, தலைவனைக் குறித்து மென்மொழியாலும் வன்மொழி யாலும் தலைவியின்பாற் பேசி அவள் குறிப்பறிய முயலுகின்றாள். தலைவி பெருநாணமுடையவள் ஆதலின், தலைவனைத் தான் காதலிப்பதை நேரே கூறமுற்படாமல், 'அறியாள் போன்றும்' 'வஞ்சித்துரைத்தும்' மறைமுகமாக முறையே உணர்த்துகின்றாள்.

''சங்கம் தரும்முத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு
துங்கம் மலிதலை ஏந்தலின், ஏந்திழை தொல்லைப்பன்மா
வங்கம் மலிகலி நீர்தில்லை வானவன் நேர்வருமே!''

''புரங்கடந் தான்அடி காண்பான் புவிவிண்டு புக்கறியா(து)
'இரங்கிடு எந்தாய்' என்றிரப்பத், தன்ஈரடிக் கென்னிரண்டு
கரங்கள்தந் தான்,ஒன்று காட்டமற் றாங்கதும் காட்டிடென்று
வரங்கிடந் தான்தில்லை அம்பல முன்றில்அம் மாயவனே!''

குறைநயப்பால் தலைமகனின் நிலைமை கேட்ட தலைமகள் பெரு நாணினள் ஆதலின், தோழியின் கூற்றுகட்கு வெளிப்படையாக மறுமொழி கொடாமல், ஓர்ந்து கூட்டினால் மறுமொழியாகும் வண்ணம், கடலின்மேலும் மாயவன்மேலும் வைத்துத் தன் உள்ளக் குறிப்பைப் புலப்படுத்தினாள். இப்பாடல்களில்,

''அடியார்களின் நல்ல சங்கம் (கூட்டுறவு) தரும் முத்தியாகிய வீடு பேற்றினை யாம் பெறுமாறு, எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டு நிற்கும் விசும்பினையும் கடந்து நிற்கும் சிவபிரான், கங்கையைத் தலையில் சூடியும், கபாலத்தைக் கையில் ஏந்தியும் ஒருவடிவம் கொண்டு போந்தருளினான்'' எனவும்; ''மாயவன் தில்லை அம்பல முன்றிலில் வரங்கிடந்தும் காண்பரிய சிவபிரானின் திருவடிகள் எமக்குப் பெரிதும் எளிவந்து இன்னருள் புரிந்தன'' எனவும் அகப் பொருட்டுறைக்கு அப்பாற்பட்ட வேறுபிற அரிய கருத்துக்களும் அமைந்திருத்தல் காணலாம்.

## 3. புனல்தரு புணர்ச்சி:

''புனல்தரு புணர்ச்சி'' என்பது அகப்பொருட்குரிய துறைகளில் ஒன்று. சுனைப் புனலில் தவறி வீழ்ந்து துயருற்றுத் தத்தளிக்கும் தலைவியை எதிர்பாராத வகையில் அவ்வழியே போந்த தலைவன் எடுத்துக் கரைசேர்த்துக் காப்பாற்றுகின்றான். அந் நன்றியை நினைந்து, தோழியின்பால் தலைவனின் குறை நேர்ந்து, அவனை மணப்பதற்குத் தன் உடன்பாட்டினைத் தலைவி குறிப்பினாற் புலப் படுத்துகின்றாள்.

''ஓங்கும் ஒருவிடம் உண்டம் பலத்தும்பர் உய்யஅன்று
தாங்கும் ஒருவன் தடவரை வாய்த்தழங் கும்அருவி
வீங்கும் சுனைப்புனல் வீழ்ந்தஅன்று அழுங்கப் பிடித்தெடுத்து
வாங்கும் அவர்க்குஅறி யேன்சிறி யேன்சொல்லும் வாசகமே!''

எனவரும் அழகிய இனிய அரிய திருப்பாடலில்,

''பிறவியாகிய கடலில் விழுந்து யான் தத்தளிக்குங்கால், என்னைத் தாமே எளிவந்து வலித்தாண்டு கொண்டு பிடித்தெடுத்துக் காப்பாற்றிப் பேருதவி செய்தருளிய தலைவர் ஆகிய சிவபெருமானுக்கு, யான் சொல்லத் தகுந்த நன்றியுரை யாது என்று சிறியேன் அறிகின்றிலேன்''

எனவும் வேறொரு ஞானப்பொருள் குறிப்பிற் புலப்பட அமைந்து நிற்றல் உணர்ந்து மகிழ்தற்குரியது. ''தனியனேன் பெரும்பிறவிப் பவ்வத்து எவ்வத் தடந்திரையால் எற்றுண்டு'' என்பது போன்று வரும் திருவாசகப்பாடல், ஈண்டு இயைத்தெண்ணி இன்புறுதற்கு உரியது.

## 4. தூது கண்டு அழுங்கல்:

''தூதுகண்டு அழுங்கல்'' என்பது ஓர் அகப்பொருள் துறை. தலைவன் வரை பொருள் குறித்துப் பிரிந்து சென்றான். சென்றவனைப் பற்றிய செய்தி ஒன்றும் தெரிந்திலது. இவனைப் போலவே, பொருள்தேடி வருவதற்கும், போர் செய்து பகைவரை அடக்கி மீள்தற்கும் பிரிந்து சென்ற ஏனையரெல்லாம் தத்தமக் குரியவர்கட்குத் தூதுவர் வாயிலாக அவ்வப்போது செய்திகள் விடுத்துக் கொண்டிருக்கின்றனர். தலைவனோ திரும்பியும் வர வில்லை; தன்நிலை குறித்துத் தூதுவர்கள் வாயிலாகச் செய்தியும் விடுக்கவில்லை. ஆதலின், அவனை நினைந்து தலைவி கவலை கொள்கின்றாள்.

''வருவன செல்வன தூதுகள் ஏதில வான்புலியூர்
ஒருவனது அன்பரின் இன்பக் கலவிகள் உள்ளுருகத்
தருவன செய்தெனது ஆவிகொண் டேகி,என் நெஞ்சில்தம்மை
இருவின காதலர் ஏதுசெய் வான்இன்று இருக்கின்றதே!''

இப்பாடலின் கண்ணும்,

"தனது மெய்யன்பர்களைப் போல யானும் இன்பம் எய்த உள்ளம் உருக்கும் கலவிகளை (அருட் செயல்களை) முன்னே செய்து, பின்பு என் உயிர் பிரிந்தாற் போலத் தாம் பிரிந்து அகன்று, ஒருஞான்றும் கட்புலனாகாமல் மறைந்துநின்று, என்னை நினைந்து வருந்தும்படி செய்த காதலர் (சிவபிரான்), இன்று யாது செய்யக் கருதியிருக்கின்றனரோ? அன்றே என்றன் ஆவியும் உடலும் உடமை எல்லாமுங் கொண்ட அவர், நன்றே செயினும் பிழை செயினும் நானோ இதற்கு நாயகம்?"

எனப் பிறிதொரு ஞானப்பொருள் கரந்துறைந்து நிற்றல் கருதி யுணர்ந்து மகிழற்பாலது.

## 5. ஊடல் நீடவாடி உரைத்தல்:

இங்ஙனமே "ஊடல்நீட வாடி யுரைத்தல்" என்பதும் ஓர் அகப்பொருட்டுறை. தலைவியின் ஊடலைத் தணிக்கத் தலைவன் முயல்கின்றான். 'உப்பமைத் தற்றாற் புலவி' என்னும் நுட்பம் தெளியாத தலைவி தனது ஊடலைச் சிறிது நீடிக்கின்றாள்; அதனால் வாடிய தலைவன் வருந்தி யுரைப்பதாக வருவது பின் வரும் செய்யுள்:

"திருந்தேன் உயநின்ற சிற்றம் பலவர்தென் னம்பொதியில்
இருந்தேன் உயவந்து இணைமலர்க் கண்ணின்இன் நோக்கருளிப்
பெருந்தேன் எனநெஞ் சுகப்பிடித் தாண்டநம் பெண்அமிழ்தம்
வருந்தேல் அதுவன்று இதுவோ வருவதோர் வஞ்சனையே!"

இப்பாடலில், மாணிக்கவாசகர் தம்மை ஆட்கொண்டருளிய 'பெண்ணோடு கூடிய அமிழ்தம்' போல்பவராகிய அம்மையப்பர் (சிவபிரான்), முன்பு தமக்குச் செய்தருளிய தலையளிகளை நினைவு கூர்ந்து இனிய முறையிற் குறிப்பிட்டருள்கின்றார்.

"ஒருவாற்றானும் திருந்தாதவனாய்த் தன்னை அடைதல் குறித்த ஒரு முயற்சியும் செய்யாமல் வீணேயுழன்று கொண்டு கிடந்த யான், பிறவித் துன்பத்தினின்றும் தப்பிப் பிழைக்கும் பொருட்டுத்

தானே தனது பேரருட் பெற்றியினால் எளிவந்து தோன்றித், தனது இணைமலர்க் கண்களில் இனிய கடைக்கண் நோக்கத்தினை என்பாற் செலுத்திப் பெருந்தேனைப் போன்று இனிமை மிக்கு, என் கன்மனமும் கரைந்துருக வாவென்று என்னையும் பூதலத்தே வலித்தாண்டு கொண்டான்''

என்னும் பிறிதொரு பொருட் குறிப்பும், இவ்வகப்பொருட்டுறைச் செய்யுளில் இனிதமைந்து திகழ்தல் காண்க. இங்ஙனம் அம்மையப்பர் திருக்கோலத்தினையும், அத்திருக்கோலத்தில் சிவபிரான் தமக்குச் செய்த அருட்டிறனையும், திருவாசகத்திலும் மணிவாசகர் ஆங்காங்கே அழகுறப் பாடியிருத்தல் அறிந்தின்புறற் பாலது.

''நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்?
தானும்தன் தையலுமாய்த் தாழ்சடையோன் ஆண்டிலனேல்!
வானும் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ!''

''தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசும்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும்உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!''

## முடிவுரை:

இங்ஙனமெல்லாம், மாணிக்கவாசகரால் தமது சிவானுபவச் செய்திகளும் ஞானப்பொருள் நலங்களும் செறிந்து விளங்கவும், காமச்சுவை கனியவும் சிறந்த முறையில் அருளிச் செய்யப்பெற்ற 'காமஞ்சான்ற ஞானப்பனுவல்' ஆகிய திருச்சிற்றம்பலக் கோவையார், கடல்எனப் பரந்து விரிந்த கருத்துச் சிறப்பும் வளமும் மிக்குடைய தாய்த் திகழ்ந்தொளிர்வது! அதன் அருமை பெருமைகள் விரிப்பிற பெருகியும் தொகுப்பின் எஞ்சியும் செல்லுமாதலின், 'சமுத்திர கலச நியாயம்' பற்றி ஈண்டைக்கு வேண்டிய அளவின் மட்டும் இயன்ற பெற்றி ஒரு சிறிது எடுத்து விளக்கப்பட்டது. 'கடல் கண்டோம் என்பார் யாவரே முடிவுறக் கண்டார்?'

# 5

# திருவாசகத்தில் சைவசித்தாந்தம்

## முன்னுரை :

சிவபிரானை முழுமுதற் கடவுளாகக்கொண்டு வழிபடும் சமயம், சைவம் எனப்படும். அச் சைவத்தின் சித்தாந்தம் அல்லது கொள்கையே, பொதுவாகச் சைவ சித்தாந்தம் என வழங்கப்படும். எனினும் சைவம் என்பதும், சைவ சித்தாந்தம் என்பதும், தனித் தனிப் பொருட் குறிப்புடையன ஆகும். சைவம் என்பது இமயம் முதல் குமரி வரையில் இந்திய நாடு முழுவதிலும் பரவியுள்ளது. ஆயினும், காசுமீரச் சைவம் என்றும், கன்னட நாட்டு வீர சைவம் என்றும், பெயர்கள் வழங்கக் காண்கிறோம். அதுபோல, நம் தமிழ் நாட்டுக்கே தனிச் சிறப்பாக உரிய சைவக் கொள்கையே, சைவ சித்தாந்தம் என வழங்கி வருகின்றது. வசுகுப்தர், கல்லடர், சோமானந்தர், அபிநவகுப்தர் முதலிய சான்றோர்களால் காசுமீர நாட்டில் பரப்பப்பெற்றது, காசுமீரச் சைவம். பசவேசுவரர், சென்ன பசவேசுவரர், சித்தராமையர், அல்லமாப்பிரபு முதலிய அருளாளர் களால் வளர்க்கப்பெற்றது, கன்னடநாட்டு வீரசைவம். அங்ஙனமே அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் என்னும் சமயாசிரியர்கள் நால்வராலும், மெய்கண்டார் அருள்நந்திசிவம் மறைஞானசம்பந்தர் உமாபதிசிவம் என்னும் சந்தான ஆசிரியர்களாலும், அவர்தம் வழி வந்த மற்றும் பற்பல அருட்பெருஞ் சான்றோர்களாலும், தமிழ் நாட்டிற் பரப்பி வளர்க்கப் பெற்றதே 'சைவசித்தாந்தம்' எனப்படும்.

## சைவ சித்தாந்தத்தின் சிறப்பு :

இத்தகைய சைவ சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பினையும், அருமை பெருமைகளையும், நம் முன்னோர் தம் நூல்களில் பல

வகைகளில் விதந்து குறிப்பிட்டுள்ளனர். ''சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்திக்கும்'' - ''தற்சிவம் கண்டுளோர் சைவ சித்தாந்தரே'' - ''சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே'' என்பன போல வரும் திருமூலர் திருமந்திரத் தொடர்கள், சைவ சித்தாந்தத்தின் சிறப்பினைக் குறிப்பிட்டு உணர்த்துதல் காணலாம்.

சிவப்பிரகாசம் என்னும் நூலில், ஆசிரியர் உமாபதிசிவம் ''சைவ சித்தாந்தமானது, புறச் சமயத்தவர்களுக்கு இருளாய் அகச் சமயத்தவர்க்கு ஒளியாய் விளங்கும்; அளவை நெறிக்கு அளவை யாகத் திகழும்; இறைவனையும் உயிர்களையும், பொன்னும் பணியும் போல் அபேதம், இருள் ஒளிபோல் பேதம், சொற்பொருள் போல் பேதாபேதம் என்று கூறும் பிற சமயங்கள் போலாமல், இறைவன் உயிர்களுடன் உடலும் உயிரும்போல் ஒன்றாகவும், கண்ணும் சூரியனும் போல் வேறாகவும், கண்ணொளியும் உயிரறிவும் போல் உடனாகவும் இயைந்து நிற்றலை இனிது உணர்த்தும்; வேதாந்த நூல்களின் பிழிவாகவும் தெளிவாகவும் திகழும்'' என்கின்றார்.

''புறச்சமயத் தவர்க்கிருளாய், அகச்சமத் தொளியாய்ப்
புகல்அளவைக்கு அளவாகிப், பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய்,இருள்வெளிபோற் பேதமும்,சொற்பொருள்போல்
பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்தினால் விளைவதாய், உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளிபோல் பிறிவரும்அத் துவிதம் ஆகும்
சிறப்பினதாய், வேதாத்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க லுற்றாம்.''

– சிவப்பிரகாசம்

மற்றும், இச் சைவ சித்தாந்தமானது, ''உலகாயதம் முதலாகச் சிவாத்துவைதம் ஈறாக உள்ள பல்வேறு மதங்கள் கூறும் கொள்கைகளை எல்லாம் கடந்தது. வேதந்தலைதரு பொருளாய் விளங்குவது. ஆயுந்தோறும் அறிஞர்களுக்கு ஆரா இன்பம் அளிப்பது. உள்ளதே தொழிற்படும் என்னும் கொள்கை (சற்காரியவாத)

நெறியினை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது" என்றும், சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கையின் சிறப்புக்களை, ஆசிரியர் உமாபதிசிவம் தொகுத்துக் கூறியருள்கின்றார்.

"நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவினர் அளவ ளாவாக் கொள்கைய தாகி, வேதந்
தலைதரு பொருளாய், இன்பாய்த், தாவில்சற் காரி யத்தாய்,
மலைவறும் உணர்வாற் பெத்த முத்திகள் மதித்தாம் அன்றே."

– *சிவப்பிரகாசம்*

## தமிழ்ப்பண்பாடு :

*சைவ சித்தாந்தக் கொள்கை நெறியினைச் "சித்தாந்த சைவம்"* என்றும் பெரியோர்கள் வழங்குவர். இது நம் தமிழகத்திற்கும், தமிழ்மொழிக்கும், தமிழ் மக்களுக்குமே உரிய, பழமையும் பெருமையும் மிக்க சிறப்பு நெறியாகும். "சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கையானது, தென்னிந்தியத் தமிழர் (திராவிடர்களின்) பேரறிவின் பெருவிளைவாகும். அது மிகப் பெரிய மாட்சிமை வாய்ந்ததுமாகும். இதனைத் தென்னிந்தியாவிற்கே, குறிப்பாகத் *தமிழர்க்கேயுரிய சமயம் எனலாம்.*[1] ஏனெனில் இதனுடைய முதன்மையான அடிப்படை மேற்கோட் பெருநூல்கள் அனைத்தும் தமிழிலேயே தமிழகத்துக் சான்றோர் பெருமக்களால், ஒழுங்காக வகுத்து வரையறை செய்து வைக்கப்பட்டுள்ளன. "சைவத் திருமுறைகள் பன்னிரண்டும், மெய்கண்ட நூல்கள் பதினான்கும், அவற்றிற்கு மாறுபடாமல் அவற்றைத் தழுவிச் செல்லும் ஏனைய பிறநூல்களுமே, சைவ சித்தாந்தத்தின் அடிப்படை முதன்மை

---

(1) "The Saiva Siddhanta system of philosophy is the choicest product of the Dravidian intellect. It is the most elaborate influential and undoubtedly the most intrinsically valuable of all the religious of India. It is peculiarly the South - Indian and Tamil religion'

- Dr. G. U. Pope.

நூல்களாக விளங்குகின்றன" என்பது, அருட்டிரு மறைமலை அடிகளார் போன்ற பேரறிஞர்களின் துணிபு.[2]

திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் என்னும் தமிழ் வேதமே பசுவாகவும் திருமூலர் அருளிய 'திருமந்திரம் என்னும் தமிழ் ஆகமமே அப்பசுவின் பாலாகவும், அப்பர் சம்பந்தர் சுந்தரர் மணிவாசகர் என்னும் நால்வர் பாடிய திருமுறைகளே அப்பாலின் நெய்யாகவும், மெய்கண்டார் அருள்நந்திசிவம் உமாபதிசிவம் என்னும் சந்தான ஆசிரியர்கள் இயற்றிய நூல்களே அந்நெய்யின் சுவையாகவும் அமையச் சிறந்து விளங்குவது, சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கை. இவ்வாற்றால் சைவ சித்தாந்தம் தம் தமிழ்நாட்டிற்கும், தமிழ்ப் பண்பாட்டிற்கும், உரிய தமிழ் நெறியேயாதல் தெளியற்பாலது.

"வேதம் பசு;அதன்பால் மெய்யா கமம்;நால்வர்
ஓதும் தமிழ்அதனின் உள்ளுறும்நெய்; - போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணை மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்"

– தனிப்பாடல்

(2) "The fact must be borne in mind that in Tamil alone exist systematic, authoritative works on the Saiva Siddhanta whereas in Sanskrit either in the Vedic or in the post-Vedic period not even a single systematic work on the philosophy is to be met with..."

– Maraimalai Adigal.

"The recent developments of western philosophy and physical science go every inch to prove the truth and value of all the fundamental doctrines that are peculiar only to the Saiva Siddhanta and not to any other religion or philosophy, ancient or modern.. "

– Maraimalai Adigal.

## தருக்க இயல்:

சைவசித்தாந்தத் தத்துவ ஆராய்ச்சி, காரணகாரிய அடிப் படையில் (Logical) அறிவு நெறிக்கு ஏற்ப (Rational) அமைந்து திகழ்வது. பலவகை ஐய வினாக்களுக்கும் நலமுற விடையளிப்பது. துணிபொருள், ஏது, காட்டு, இணைத்தல், முடித்தல் (பிரதிஞ்ஞை-ஏது-திருட்டாந்தம்-உபநயம்-நிகமனம்) என்னும் ஐவகை யுறுப்புகள் அமையச் சான்றுகள் காட்டி, மெய்ப்பிக்கப்பட்ட கொள்கையே சித்தாந்தம் எனப்படும் முறைமைக்கு ஏற்பத், தகுந்த நெறிமுறை கள் பிறழாது ஆராய்ந்து காட்டி விளக்கிச் சொல்வது. இதற்குப் பின்வரும் சிவஞான போதப் பேருரைப் பகுதி, சிறந்த இனிய எடுத்துக்காட்டாகும்.

இத்தகைய சைவசித்தாந்தம் என்னும் அரிய பெரிய தத்துவக் கொள்கையினை வகுத்து விளக்கிய நம்முடைய சைவப் பெருஞ் சான்றோர்கள், திருவாசகத்தை நன்றாக ஓதி உணர்ந்தவர்கள்; அதன்கண் பெரிதும் தோய்ந்து ஈடுபட்டுத் திளைத்தவர்கள். திருவாசகத்தின் ஒவ்வொரு சொல்லையும் சொற்றொடரையும், அவர்கள் பெரிதும் நுனித்து ஆய்ந்துணர்ந்து அவற்றின் அடிப் படையிலும், அவற்றிற்கு ஒரு சிறிதும் மாறாகாத வகையிலுமே, சைவசித்தாந்தக் கொள்கைகளை வரையறை செய்திருக்கின்றனர் எனத் தெரிகின்றது. சமய ஞானத் தத்துவக் கொள்கைகளில் தெளிவு ஏற்படாத பொழுதும், சிக்கல்கள் நேரும் பொழுதும், இன்னதுதான் ஏற்புடைத்து என்று எண்ணித் துணிந்து முடிவு செய்வதற்கு, நம் முன்னோர்கள் திருவாசகத்தினை ஒரு மேல்வரிச் சட்ட நூலாக மேற்கொண்டிருந்திருக்கின்றனர் எனலாம்.

## கவிதையும் தத்துவமும் :

கவிதைக்கும் தத்துவத்திற்கும் மிகமிக நெருங்கிய தொடர்பு உண்டு. மனித வாழ்க்கை படிப்படியே முன்னேறி, வளர்ந்து சிறந்து ஓங்குவதன் மூலம் நாகரிகம் தழைக்கின்றது. நாகரிகத்தின் செழிப்பும் சிறப்புமே பண்பாடாக மலர்கின்றன. வாழ்க்கையின் வளமும் பண்பாட்டின் மாட்சிமையும் வளர்ந்து ஓங்குந்தோறும்,

சிறந்த கவிதைகள் தோன்றுகின்றன. கவிதைகள் பல்கிப் பெருகு வதனால், இலக்கியங்கள் தோன்றுகின்றன. இலக்கியங்களின் பிழிவும் சாரமுமாக ஒருங்கு திரண்டு உருவாகும் அறிவு அனுபவக் கொள்கைகளே, தத்துவம் என்னும் பெயரால் வழங்கப்படுகின்றன.

எனவே கவிதைக்கும் தத்துவத்திற்கும் மிகமிக நெருங்கிய இயைபும் தொடர்பும் உண்டு எனலாம். "சிறந்த தத்துவ ஞானி யாக இல்லாத எவனும் இதுவரையில் ஓர் உயர்ந்த கவிஞனாக விளங்கியதில்லை" ("No man was ever yet a great poet without being at the same time a profound philosopher"– S. T. Coloridge) என்பது அறிஞர்கள் கண்ட முடிவு. ஆதலின் திருவாசகம் ஒரு சிறந்த கவிதை நூல் என்பது மட்டுமேயன்றி, மிகச் சிறந்த ஒரு தத்துவ ஞான நூலும் ஆகும் என்று நாம் கூறுதல் பொருந்தும்.

சைவசித்தாந்தம் என்னும் அரிய பெரிய தத்துவக் கொள்கை யினை வகுத்து விளக்கிய நம்முடைய சைவப்பெருஞ் சான்றோர்கள், திருவாசகத்தை நன்றாக ஓதி உணர்ந்தவர்கள்; அதன்கண் பெரிதும் தோய்ந்து ஈடுபட்டுத் திளைத்தவர்கள். திருவாசகத்தின் ஒவ்வொரு சொல்லையும் சொற்றொடரையும், அவர்கள் பெரிதும் நினைத்து நுனித்து ஆய்ந்துணர்ந்து அவற்றின் அடிப்படையிலும், அவற்றிற்கு ஒரு சிறிதும் மாறாகாத வகையிலும், சைவசித்தாந்தக் கொள்கை களை வகுத்து வரையறை செய்திருக்கின்றனர் எனத் தெரிகின்றது.

சமய ஞானத் தத்துவக் கொள்கைகளில் தெளிவு ஏற்படாத பொழுதும், சிக்கல்கள் நேரும்பொழுதும், இன்னதுதான் ஏற்புடைத்து என்று எண்ணித் துணிந்து முடிபு செய்வதற்கு, நம் முன்னோர்கள் திருவாசகத்தினையே ஒரு மேல்வரிச் சட்ட நூலாக மேற்கொண்டு இருந்திருக்கின்றனர் எனலாம்.

## நச்சினார்க்கினியர் :

தமிழ்நூல் உரையாசிரியர்கள் பலருள் தலைசிறந்த ஒருவர் நச்சினார்க்கினியர். 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர்' என்றும், 'நச்சினார்க்கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்' என்றும், தமிழறிஞர்கள் அவரைப் பெரிதும் போற்றிப் பாராட்டிப் புகழ்வர்.

1. அவர் திருமுருகாற்றுப் படையில், 'சேவடி படரும் செம்மல் உள்ளம்' என்னும் தொடருக்குப் பொருள் விளக்குங்கால், திரு வாசகத்தினையே மேற்கோள் காட்டுகின்றார்.

> "திருவடியே வீடாய் இருக்கும் என்றார்; அது, 'தென்னன் பெருந் துறையான் காட்டாதன எல்லாம் காட்டிச் சிவம் காட்டித் தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன்காட்டி' என்பதனாலும், பிறரும் திருவடியைக் கூறுமாற்றாலும் உணர்க"

2. இங்ஙனமே கந்தழி என்னும் சொற்பொருள் பற்றி விளக்குங்கால்,

> "கந்தழியாவது ஒரு பற்றும் அற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள்; இதனை, 'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல், பற்றலாவதோர் நிலையிலாப் பரம் பொருள் என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றான் உணர்க"

என வரைந்திருத்தலும் அறிந்து மகிழ்தற்குரியது. தமிழ்நெறியியல் அறிந்த சான்றோர் ஆகிய நச்சினார்க்கினியர் இவ்விரண்டு இடங் களிலும் வேறுபிற எத்தனையோ நூல்களினின்று மேற்கோள்கள் காட்டலாமாயினும், திருவாசகத்தினையே சிறப்புற விதந்தெடுத்துக் காட்டியிருத்தல் கருதி மகிழ்தற்குரியது.

இவ்வாறே சைவசித்தாந்தப் பெருஞ் சான்றோர்களும், தத்துவக் கொள்கைகளை வரையறை செய்து உணர்த்துவதற்குத் திரு வாசகத்தையே, மிகச் சிறந்த பிரமாண நூல்களுள் ஒன்றாக மேற் கொண்டுள்ளனர். இவ்வுண்மையைத் தெள்ளிதின் விளக்குகின்ற, இரண்டொரு சான்றுகளை மட்டும் ஈண்டுக் காண்போம்.

## 1. குருவும் சிவமும் :

இறைவனே குருவடிவமாக மானுடச் சட்டை தாங்கி எழுந்தருளி உயிர்களையெல்லாம் ஆட்கொண்டருளுகின்றான் என்பது சைவ

சித்தாந்தக் கொள்கை. மாணிக்கவாசகரின் அருள் வாழ்க்கையை யும் திருவாசகத்தையும் அடிப்படையாகக் கொண்டே இக்கொள்கை வரையறை செய்யப் பெறுவதாயிற்று. எல்லாம் வல்ல சிவபெருமான் திருப்பெருந்துறையிற் குருந்தமர நிழலில் குருவடிவம் கொண்டு போந்த மணிவாசகரை ஆட்கொண்ட திறத்தினை நினைத்தே மெய்கண்டார் பெருமான்,

> "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
> அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே''

எனச் சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரத்தினை அருளிச் செய்தனர். அருவ நிலையில் உள்ள இறைவன் உருவம்கொண்டு வருதல் இயலுமோ? எனச் சிலர் ஐயுற்று வினவலாம். அதற்குத் திருக்களிற்றுப்படியாரில், திருக்கடவூர் உய்யவந்த தேவர் விடை கூறுகின்றார். உவர்ப்பு என்னும் சுவை அருவமேயாயினும், அது உப்பு என்னும் உருவப் பொருளாகத் திரண்டு குவிந்து நிற்றலைக் காண்கிறோம். ஆதலின் இறைவன் அருவநிலையில் இருப்பினும், தனது அன்பர்களை ஆட்கொண்டு காத்தருள உருவம்கொண்டு போதருதல் இயலும் என்பது. அவர் கூறும் விளக்கம் (91). இவ் வுண்மையை வலியுறுத்துவதற்கு அவர்,

> "கண்ணால் யானும் கண்டேன் காண்க
> அருள்நனி சுரக்கும் அமுதே காண்க
> கருணையின் பெருமை கண்டேன் காண்க
> புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
> சிவன்என யானும் தேறினன் காண்க
> அவன்எனை ஆட்கொண்டு அருளினன்"
>
> "அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
> குருபரன் ஆகி அருளிய பெருமை"

என்னும் திருவாசக வரிகளையே நினைவு கூர்ந்து, மேற்கோள் காட்டியிருக்கின்றார் 'சிவன் எனவே தேறினன் யான் என்றமை யால், இன்றும் சிவன் அவனி வந்தபடி செப்பில்...' எனவரும்

திருக்களிற்றுப்படியார் (91) செய்யுளில், திருவாசகவரியே மேற் கோள் நிலையில் வந்திருத்தல் காண்க. திருவருட்பயன் என்னும் சைவசித்தாந்த நூலின்கண் வரும் ''அருளுருநிலை'' என்னும் தலைப்பு முழுவதும் திருவாசகத்தை அடியொற்றியதேயாகும்.

## 2. ஒளியும் இருளும்

இறைவன் 'அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்' நிற்கின்றான். ஆயினும் உயிர்கள் அறியமாட்டாமல், பொறி புலன்களுடன் இயைந்து மயங்கியே நிற்கின்றன. இஃது எதுபோலும் என்னில், சூரியன் எவ்வளவு பேரொளி பரப்பித் திகழ்ந்தாலும், பிறவிக் குருடர்கள் அதனை ஒரு சிறிதும் காண முடிவதில்லை. அவ்வாறே, உயிர்களும் மலங்களினால் மயங்கி அறிவிழந்து, இறைவனை அறியமாட்டாமல் துன்புறுகின்றன. "இங்கும்தான் அந்தகருக்கு இரவி இருள் ஆகும்; ஈசன் அருட்கண் இல்லார்க்கு ஒளியாயே இருள் ஆம்" என்பது சிவஞானசித்தியார் (317). ''எங்கும் நீர், நீரேயாயினும் பருகுவதற்கு ஒரு துளியும் இல்லை'' என அமைத்து ஆங்கிலக் கவிஞர் ஒருவர் பாடுகின்றார். அங்ஙனமே, இறைவனது திருவருள்வெள்ளம் எங்கும் பரவிப் பெருகிக் கிடப்பினும், உயிர்கள் இறைவனை அறியமாட்டாமல் அமைந்து ஆங்கிலக் கவிஞர் ஒருவர் பாடுகின்றார். அங்ஙனமே, இறைவனது திருவருள் வெள்ளம் எங்கும் பரவிப் பெருகிக் கிடப்பினும், உயிர்கள் இறைவனை அறியமாட்டாமல் அமைந்து உழலுகின்றன என்கின்றார் உமாபதிசிவம். இந்நிலையை உன்னும்போது, அவருக்குத் திருவாசகமே நினைவிற்கு வருகின்றது. "வெள்ளத்துள் நாவற்றியாங்கு உன் அருள் பெற்றுத் துன்பத்தினின்றும் விள்ளக்கிலேன்" (118) எனவரும் நீத்தல் விண்ணப்ப வரிகளை நினைவு கூர்ந்தே,

> "வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
> கள்ளத் தலைவர் கடன்''

எனத் திகுவருட் பயனில், உமாபதிசிவம் அருளிச் செய்திருக்கின்றார். "முன்னோர் மொழி பொருளே யன்றி, அவர் சொல்லும் பொன்னேபோற் போற்றுவம் யாம்'' என்பதற்கு, இஃது ஒரு நல்ல எடுத்துக்காட்டு ஆகும்.

## 3. நீரும் தீயும்:

இறைவன் சடம் சித்து, உயிரில் பொருள், உயிர்ப்பொருள் ஆகிய எல்லாவற்றுள்ளும் விரவிக் கலந்து நிற்கின்றான். ஆயினும், அவன் அவைகளில் ஒன்றல்லன்; அவற்றின் வேறுபட்டவன்; வேறுபட்ட அவன் அவைகளுள் எங்ஙனம் பிரிவற இயைந்துநிற்றல் இயலும் எனச் சிலர் வினவுதல் கூடும். இவ்வினாவுக்கு ஒரு வகையில், திருவருட் பயன் என்னும் சைவசித்தாந்த நூல் சிறந்ததொரு விளக்கம் தருகின்றது. நீர் தண்மையுடையது. தீ வெம்மையுடையது. நீரும் தீயும் தம்முள் வேறுபட்டவை; மாறுபட்டவை. எனவே நீரும் தீயும் தம்முள் ஒன்று கலக்கமாட்டா. ஆயினும், தண்மைமிக்க நீரின்கண், ஒரோவழி தீயினது வெம்மை கலந்து நிற்றலும் உண்டு; நீரும் தீயும் தம்முள் அறவே மாறுபட்டவையாயினும், வெந்நீரின் கண் அவையிற்றின் இரண்டு தன்மையும் பிரிவற விரவிக் கலந்து நிற்கக் காண்கின்றோம். அதுபோலவே, சடமும் சித்தும் ஆகிய உலகியற் பொருள்களெல்லாம் அறவே வேறுபட்டவையாயினும், ஒரோவழி இறைவன் அவற்றோடு கலந்து ஒன்றி உடனாகவும் நிற்கின்றார். இறைவனின் இரண்டன்மை ஆகிய இவ்வியல்பினையே 'அத்துவிதம்" அல்லது 'வேறாய் உடனாதல்' எனச் சைவசித்தாந்த நூல்கள் சாற்றும். இறைவனின் இவ்வியல்பினையே,

> "எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
> தங்கும்அவன் தானே தனி"

எனத் திருவருட்பயன் தெரிவிக்கின்றது. இதற்கு உரிய ஆதாரமும் மேற்கோளும், "பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப் பட்ர்ந்ததோர் படரொளிப் பரப்பே; நீருறு தீயே நினைவதேல் அரிய நின்மலா" (395) எனவரும் திருவாசகப் பகுதியேயாகும்.

## 4. இருவினை ஒப்பு:

இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்பன, சைவ சித்தாந்தத்தில் அடிக்கடி வழங்கப்பெறும் குறியீடுகள். இருவினையொப்பு என்பது, மலபரிபாகம் அடைதற்கும், சத்திநிபாதம் எய்துதற்கும், ஞானம் பெறுவதற்கும் உரிய வாயில் ஆகும்.

"இருவினை யொப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனாம் ஞானத்தை வந்து"

என்பது சிவஞானபோதம். இருவினைகளாகிய புண்ணிய பாவங்கள் இரண்டும், சரியை கிரியை யோகம் என்னும் சிறந்த தவத்தின் பயனாகத் தராசுத் தட்டுகளைப்போல நேராக நின்று சமநிலையை அடைதலே, இருவினையொப்பு எனப்படும். 'ஒட்டு இருவினைச் சமம், கட்டவிழ் பருவம்' என்பது பாம்பன் சுவாமிகள் அருளிய ஞானவாக்கியம்.

ஒரு பொருளில் விருப்பும், பிறிதொரு பொருளில் வெறுப்பும் கொள்ளுதல் இன்றிப், புண்ணிய பாவம் இரண்டிலும் அவற்றின் பயன்களிலும் விருப்பு வெறுப்பு இன்றிப் பொதுமையுணர்வுடன் இருக்கப்பெறும் நிலையையே, இருவினையொப்பு எனக் கொள்ளுதல் பொருந்தும். இதனைச் 'செஞ்சாந்து எறியினும் செத்தினும் போழினும் நெஞ்சோர்ந்து ஓடாநிலைமை' எனத் தொல்காப்பியத் திற்கு உரை வரைந்த பேராசிரியர் குறிப்பிடுவர். இதனைச் 'சாந்தம்' அல்லது 'சமநிலை' என்றும் நூல்கள் கூறும்.

> "ஊழால் விளையும் இன்ப துன்பங்களை எவன் இறை யருளின் கொடை என்று சமநோக்கோடு ஏற்றுக்கொள்ளுகின் றானோ, – எவனுடைய உணர்ச்சியும் நுண்ணுணர்வும் முரண் படாமல் நன்கினிது ஒன்றுபட்டு இணைந்து நின்று, ஊழ்த் தேவதையினுடைய விரல்களின் விருப்பப்படியெல்லாம் ஒலிப்ப தற்கு ஊதுகுழலாக இருக்கமாட்டானோ, – எவன் பொறி புல னுணர்ச்சிகளுக்கு அடிமைப்படாதவனோ – அத்தகையவனை எனக்குக் காட்டுக; அவனை என் இதயத்தின் ஆழத்தில், உள் ளத்தின் உள்ளுக்குள்ளே, பொன்போற் பொதிந்து வைத்துக் கொண்டு போற்றுகின்றேன். அத்தகையோர் இறையருள் பெற்ற பெரியோர்கள் ஆவர்"[3]

(3) "A man that Fortunes' buffets and rewards
Hast taken with equal thanks; and blest are those
Whose blood and judgement are so well commingled
That they are not a pipe for Fortune's finger
To sound what stop she pleases...

என்று ஆங்கிலப் பெருங்கவிஞர் ஆகிய ஷேக்ஸ்பியர் (William Shakespeare) தாம் இயற்றிய ஹாம்லெட் (Hamlet) என்னும் நாடக நூலிற் கூறியிருத்தலும் ஈண்டு நாம் சிந்தித்து மகிழ்தற்கு உரியது. இந்நிலையினையே, சைவசித்தாந்த நூல்கள் 'இருவினையொப்பு' என இயம்புகின்றன.

"உணக்கி லாததோர் வித்துமேல் விளையாமல்
என்வினை ஒத்தபின்
கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து
காட்டினாய் கழுக்குன்றிலே" எனவரும்

திருவாசக வரிகளில், இருவினையொப்புப் பற்றிய சைவசித்தாந்தக் கருத்திற்கு அடிப்படை மூலம், அமைந்திருத்தல் காணலாம்.

## 5. உருமூன்று :

இறைவனைப் பல்வேறு சமயங்களும், பலப்பல வகையிற் கூறு கின்றன. ஒருசில சமயங்கள் கடவுளை அருவம் என்றே கொள் கின்றன. ஒருசில சமயங்கள் கடவுளை உருவம் என்றே உரைக் கின்றன. இங்ஙனம் இவ்விருதிற நிலைகளும் ஒவ்வொன்றனையே பற்றிக்கொண்டு, சமயங்கள் பலவும் தம்முள் இகலிக் கலாம் விளைத்து நிற்க, இவ்விருதிற நிலைகளையும் ஏற்று உடன்பட்டுக் கொள்வதுடன், இவற்றின் வேறாக உருவாருவம் என்னும் ஒரு நிலையும் இறைவனுக்கு உண்டு என்று சைவசித்தாந்தம் சாற்று கின்றது. இதனை,

"அருவரும்,உருவா ருபம் ஆனதும், அன்றி நின்ற
உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்கு உள்ள வாமே"

எனவரும் சிவஞானசித்தியார் செய்யுள் (சு. 58) கொண்டு தெளிய லாம். பிரமன் திருமால் உருத்திரன் மகேசுவரன் ஆகிய மூர்த் தங்கள் நான்கும் உருவம்; வித்து நாதம் சத்தி சிவம் என்பன

---

Give me that man,
That is not passion's slave and I will wear him
In my hearts core, ay, in my heart of heart,
As I do thee..."

– Shakespeare, Hamlet

நான்கும் அருவம்; சதாசிவம் என்னும் சிவலிங்கத் திருமேனி அருவுருவம் (சித்தியார் 164). கண் காது மூக்கு முகம் முதலிய உறுப்புகள் காணப்படாமையால் அருவமாகவும், கண்ணாற் காணப் படுகின்ற பருவடிவப் பிழம்பாகப் புலனாகி நிற்றலின் உருவமாக வும், சிவலிங்கம் திகழ்கின்றது. ஆதலின் அதனை 'உருவாருவம்' என்றும், 'சகளநிஷ்களம்' என்றும் நூல்கள் நுவலும்.

> ''காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
> நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்''

என்பது பெரியபுராணம். இங்ஙனம் இறைவன் அருவம் உருவம் அருவுருவம் என்னும் மூன்று நிலைகளிலும் விளங்குகின்றான் எனச் சைவசித்தாந்தம் கூறுவதற்கு,

> ''உருமூன்று மாகி உணர்வரிதாம் ஒருவனுமே
> புரம்மூன்று எரித்தவா பூவல்லி கொய்யாமோ''

எனவரும் திருவாசகப் பகுதியே, மூலமும் ஆதாரமும் ஆகும் எனத் துணிந்து மொழியலாம்.

## 6. மறக்கருணை :

உலகில் உள்ள சமயங்கள் பலவும், இறைவன் பாவிகளைச் சபிக்கின்றான்; தீயவர்களைத் தண்டிக்கின்றான் எனப் பல செய்தி களைக் கூறக்காண்கின்றோம். இறைவன் கோபங் கொள்கின்றான், கோபம் கொண்டால் தண்டிக்கின்றான்; அழிக்கின்றான் என்றே பல சமயங்கள் கருதுகின்றன. ஆனால் சைவசித்தாந்தமோ, கடவுள் ஒரோவழி தண்டிக்க நேரினும், அத்தண்டனையும் கூட, அவர்தம் அளவற்ற பெருங் கருணைத் திறத்தினாலேயே நிகழ்கின்றது என விளக்குகிறது.

தந்தையும் தாயும், தாம் பெற்றெடுத்த மைந்தர்கள் தம்முடைய சொற்படி நடவாமல் தவறுகள் செய்வார்களாயின், ஒரோவழி அவர்களை அடித்தும் தண்டிப்பதுண்டு. அஃது அவர்கள் தமது மைந்தர்களின் மீது வைத்துள்ள அளவற்ற அன்பின் காரணமாகவே அன்றிப் பிறிதொன்று பற்றியன்று.

"தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள், தம்சொல் ஆற்றின்
வந்திடா விடின்உ றுக்கி, வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர்; எல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்;
இந்தநீர் முறைமை யன்றோ? ஈசனார் முனிவும் என்றும்"

– சித்தியார், 105.

சிறந்த மருத்துவ அறிஞர் ஒருவர், ஒரு நோயாளருக்கு மிகவும் கசப்பான மருந்தையளித்துக் கடும் பத்தியங்களை விதிக்கின்றார்; மற்றொரு நோயாளருக்கு மிகவும் சுவையான மருந்தைக் கொடுத்துப் பாலும் பழமும் உண்ணச் செய்கின்றார்; வேறொரு நோயாளருக்கு மிகவும் துயரம் தருகின்ற அறுவைச் சிகிச்சை புரிகின்றார். இஃது அம்மருத்துவரின் விருப்பு வெறுப்பு அல்லது பரிவு சினம் என்பது பற்றி நிகழ்வதன்று. அவ்வவர்க்குள்ள நோயின் இயல்புக்கு ஏற்ப அமைவது.[4]

"மண்ணுளே சிலவி யாதி, மருத்துவன் அருத்தி யோடும்
திண்ணமாய் அறுத்துக் கீறித் தீர்த்திடும் சிலநோய் எல்லாம்
கண்ணிய கட்டி பாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்;
அண்ணலும் இன்பத் துன்பம் அருத்தியே, வினைஅ றுப்பன்"

– சித்தியார், 125.

இம்முறையிலேயே, இறைவனும் உயிர்களுக்கு ஏற்றபெற்றி அருள்புரிந்து அவைகளை ஆட்கொள்கின்றான் (சித்தியார், 125).

---

(4) "A good physician, when a disease is so bad and so great that he has to cut off a hand, foot, ear, eye, or let it decay, does so in order to save the body. Looked at from the point of view of the member that he cuts off, he seems a cruel and merciless man; but when looked at from the point of view of the body, which he intends to save, it turns out that he is a fine and true man and does a work that is good and Christian, as far it goes"

– Martin Luther.

ஆதலின், ஒரோவழி இறைவன் தண்டனைகள் அளிப்பதும், அவன் நம்மீது கொண்டுள்ள அளவற்ற பேரருட் பெற்றியினாலேயே ஆகும்; "நிக்கிரகங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது" (சித்தியார், 105) என்பது, சைவசித்தாந்தக் கொள்கை. இதனை "மறக்கருணை" எனச் சைவசித்தாந்த நூல்கள் கூறும். (போற்றிப்பஃறொடை 51–53)

> "ஏற்று வந்தெதிர் தாமரைத் தாள்உறும்
> கூற்றம் அன்னதோர் கொள்கைஎன் கொள்கையே" (1)
>
> "உடையாய் கூவிப் பணிகொள்ளாது
> ஒறுத்தால் ஒன்றும் போதுமே" (2)
>
> "நயனங்கள் மூன்றுடை நாயகனே தண்டித்தால்
> சயம்அன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ" (3)
>
> "காமன்உடல் உயிர்காலன் பல்காய் கதிரோன்...
> தூய்மைகள் செய்தவா தோள்நோக்கம் ஆடாமோ" (4)

என்பன போலவரும் திருவாசகப் பகுதிகளே, இறைவனின் மறக் கருணை பற்றிய விளக்கத்திற்கு ஏதுவாகும் எனலாம்.

## 7. அடியார் உறவு:

இறைவனின் அருளைப் பெறுவதற்கு அடியார் கூட்டுறவு வேண்டும் என்பதனைச் சைவசித்தாந்தம் பெரிதும் வற்புறுத்துகின்றது. "அடியவர்க்கு அன்பில்லார் ஈசனுக்கு அன்பில்லார்" என்பது சிவஞானசித்தியார் (323). "சிவ பக்தர்களோடு இணங்குக; அல்லாதாரோடு இணங்கற்க" எனக் கட்டளையிடுகின்றது சிவஞான போதம். அப்பகுதிக்கு உரை வரைந்தருளும்போது, மாதவச் சிவஞான சுவாமிகள், சிவபக்தர் அல்லாதாரோடு இணங்கியவழி விளையும் தீங்குகளை விளக்குதற்கு,

> "தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
> முனிவி லாததோர் பொருளது கருதலும்,
> ஆறு கோடி மாயா சத்திகள்

வேறு வேறு மாயைகள் தொடங்கின;
ஆத்தம் ஆனார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறினர்;
விரத மேபரம் ஆக வேதியரும்
சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்......”

எனவரும் போற்றித் திருவகவல் திருவாசகப் பகுதியையே எடுத்துக் காட்டியுள்ளார். ‘‘உடையாள் உன்றன் நடுவிருக்கும்; உடையாள் நடுவுள் நீ இருத்தி; அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால், அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என மணிவாசகர் இறைவன்பால் வேண்டிக்கொள்வது அனைவரும் அறிந்தது.

## 8. செய்தனவே தவமாதல்:

பெரியபுராணத்தில் வரும் சண்டேசுரநாயனார் வரலாறு, நாம் அனைவரும் அறிந்தது. சண்டேசுரர், வேதியரும் தமது தந்தையும் ஆகிய எச்சதத்தரின் இருகால்களையும் தடிந்தார். அது மிகப்பெரிய குற்றமும் பாவமும் ஆகும். ஆயினும் சிவபிரான் அவருக்குத் திரு வருளைச் சொரிந்து, அவரை அண்டர் தமக்கு அதிபன் ஆக்கித் 'தொண்டர்க்கு நாயகமாம்' பேறும் அளித்துச் சிறப்பித்தார். இது பொருந்துமோ? என நம்மனோர்க்கு ஐயம் எழலாம். அதனை நுண்ணிதின் எண்ணி யுணர்ந்த சேக்கிழார் பெருமான்,

‘‘வந்து மிகைசெய் தாதைதாள்
  மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே
  அரனார் மகனார் ஆயினார்;
இந்த நிலைமை அறிந்தார் யார்?
  ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே
  தவமாம் அன்றோ? சாற்றுங்கால்’’

என வினவி விடையளித்துத் தெளிவுறுத்தி முடித்தருள்கின்றார். அப்போது சேக்கிழார் பெருமான் தம் திருவுள்ளத்தில் நினைவு கூர்ந்தது, ''சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன் கருணையினால் தோள்நோக்கம் ஆடாமோ'' என்பனபோன்ற திரு வாசகப் பகுதிகளையே யாகும் எனலாம்.

## 9. விளையாட்டு :

இறைவன் உலகைப் படைக்கின்றான், அழிக்கின்றான், என் பதனை, இறையுண்மையை உடன்படும் சமயங்கள் பலவும் கூறும். ஆயினும், இங்ஙனம் இறைவன் உலகைப் படைத்தலும் காத்தலும் அழித்தலும் எற்றுக்கு? என வினவினால், எல்லாச் சமயங்களும் ஒரேவகையில் விடை தருவதில்லை. தன்பொருட்டு என்றும், பிறர் பொருட்டு என்றும், வீணுக்கு என்றும், விளையாட்டுக்கு என்றும், வெவ்வேறு சமயங்கள் வெவ்வேறு வகையில் விடைகள் புகலும்.

(1) தன்பொருட்டு எனின், வரம்பில் இன்பமுடைய முதல்வ னுக்கு இச்செய்கையான் வரக்கடவதொரு பயன் இல்லை. (2) உயிர் களாகிய பிறர்பொருட்டு எனின், உயிர்களும் இறைவனும் அபேதமோ? பேதமோ? பேதாபேதமோ? என வினா நிகழும். (3) அபேதமாயின், அது தன்பொருட்டேயாம். (4) பேதமாயின் தன்னின் வேறுபட்ட உயிர்களுக்காக அதனைச் செய்வதற்கு ஓர் இயைபும் இல்லை. (5) பேதாபேதம் எனின், ஒரு பொருட்கே இரண்டு மாறுபட்ட தன்மை கோடல் பொருந்தாது. (6) இனி, வேறு பயன் எதுவும் கருதாமை ஆகிய வீணுக்கு எனின் அது பித்தர் செய்யும் தொழிலோடு ஒக்கும். (7) விளையாட்டுக்கு எனின், அஃது அறிவு வளரப்பெறாத இளஞ்சிறார்களின் இயலும் செயலு மாக முடியும். ''விளையாட்டு என்னில் சிறுமழவு இறையது ஆகும்'' என்பது, பௌத்தர்கள் கருத்து (சித்தியார் பரபக்கம், 87), எனவே, இறைவன் உலகத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்த லும் விளையாட்டிற்காக என்னும் கொள்கை. சைவசித்தாந்தத் திற்கும் உடன்பாடு அன்று.

ஆயினும் சைவசித்தாந்தச் சான்ஞேர்கள் ஆகிய அருள்நந்தி சிவமும், உமாபதி சிவமும், 'விளையாட்டு' என்னும் கொள்கையை அறவே மறுத்துவிடாமலும், முற்றிலும் தழுவிக்கொள்ளாமலும், ஓரளவில் ஏற்று உடன்பட்டுக்கொள்ளக் காண்கின்றோம். "முன்ன வன் **விளையாட்டு என்று மொழிதலும் ஆம்**" என எச்ச உம்மை கொடுத்து உரைத்துத் தழுவிக்கொள்கின்றார் அருள்நந்தி சிவம் (சித்தியார், 56). "ஏற்ற இவை திருவிளையாட்டாக இயம்பு வார்கள்" எனக் குறிப்பிடுகின்ருர் உமாபதிசிவம் (சிவப்பிரகாசம், 18).

இங்ஙனம் இறைவன் முத்தொழில் இயற்றுதல் திருவிளை யாட்டின் பொருட்டே என்னும் கொள்கையினை முழுவதும் இல்லா விட்டாலும், ஓரளவேனும் சைவசித்தாந்த ஆசிரியர்கள் தழுவிக் கொள்ள நேர்ந்தமை,

> "காத்தும் படைத்தும் கரந்தும் **விளையாடி**..."
>
> "ஐயா! நீ ஆட்கொண்டு அருளும் **விளையாட்டின்**
> உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்"

எனத் திருவாசகம் திருவெம்பாவைப் பாடல்களில் (11, 12) மாணிக்க வாசகப்பெருமான் திருவாய் மலர்ந்தருளிச் செய்திருத்தலை, நினைவு கூர்ந்தமை பற்றியேயாம் எனத் துணிந்து கூறலாம்.

அற்றேல், முற்கூறிய குற்றம் என்னாவது? எனின், "ஈண்டு விளையாட்டு என்றது 'ஐங்கலப்பாரம் சுமத்தல் சாத்தனுக்கு விளையாட்டு' என்புழிப்போல், அத்துணை எளிதிற் செய்யும் ஆற்ற லுடைமை குறித்தேயாகலின், அதனை அறிவில்லாத இளஞ் சிறார் களின் செயலோடு ஒக்கும் என்றல் பொருந்தாது" என்று ஆசிரியர் மாதவச் சிவஞானசுவாமிகள் அரிய முறையில் அமைவுரை கூறி யிருத்தல் அறிந்து மகிழத்தக்கது.

## 10. திரோதான சத்தி:

சைவசித்தாந்த நூல்களில், திரோதான சத்தி என்பதுபற்றி ஆங்காங்கே பேசப்படும். திரோதான சத்தியாவது, உயிர்களைப் பற்றிநிற்கும் மும்மலங்களும் தத்தம் தொழில்களைச் செய்யுமாறு

ஏவி இயக்குவது. உயிர்கள் உலகியல் நிகழ்ச்சிகளில் ஈடுபட்டுத் தத்தம் வினைப் பயன்களை நுகர்ந்து தீர்த்தற்பொருட்டு, உலகியல் வாழ்வில் நேரும் நன்மை தீமைகள் ஆகியவற்றை உயிர்கள் உணராதபடி மறைத்துவைப்பது திரோதான சத்தியாகும். "ஏயும் மும் மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும் தூயவன் தனதோர் சத்தி திரோதான கரியது" என்பது சித்தியார்.

இங்ஙனம் மலங்களைத் தொழிற்படும்படி ஏவி இயக்கி, உயிர் களுக்கு மறைப்பினை விளைவிக்கும் திரோதான சத்தியே, உயிர் களுக்கு மலபரிபாகம் வந்தபின்னர் அனுக்கிரக சத்தியாக மாறி நின்று, எல்லா நலங்களையும் விளைவிக்கும். சேயின் குற்றம் கண்டு சினந்து கடிந்து ஒறுக்கும் தாயே, பிறகு அதன் நற்றம் கண்டு உவந்து அன்புசெய்து நலம்புரிதல் போல்வது இஃது!

இவ்வாறு இறைவனின் திருவருள் ஆகிய அம்மையே, முதற் கண் மறைப்பாற்றலாக இருந்து, பின்னர் அருளாற்றலாக மாறி நலம் விளைவித்தலை,

> "முற்சினம் மருவு திரோதாயி கருணை ஆகித்
> திருந்திய சத்திநி பாதம் திகழும் அன்றே"

எனச் சிவப்பிரகாசம் என்னும் சித்தாந்த நூல் கூறும் (20, 32) முதனிற் சினம் மருவித் திரோதாயி என்னும் மறைப்பாற்றலாக

---

> "Heaven from all creatures hides the book of fate
> All but the page prescribed, their present state;
> From brutes what men, from men what spirits know:
> Or who could suffer being here below?
> The lamb,thy riot dooms to bleed today,
> Had he thy reason, would he skip and play?
> Pleas'd to the last, he crops the flowery food,
> And licks the hand just raised to shed his blood,
> Oh, blindness to the future, kindly given
> That each may fill the circle marked by Heaven,
> Who sees with equal eyes, as god of all,
> A hero perish, or a sparrow fall."

– Alexander Pope.

இருப்பதே, பிறகு அந்நிலையின் வேறுபட்டு அநுக்கிரகசத்தி என்னும் அருளாற்றலாக மாறி நிற்கும் என்னும் சைவ சித்தாந்த உண்மைக்கு மூலமும் சான்றும், "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" எனவரும் திருவாசகத் திருவெம்பாவைத் தொடரே யாகும்.

## 11. ஐந்தொழில்கள்:

உலகமானது அறிவில்லது (அசேதனம், சடம்), அறிவுடையது (சேதனம், சித்து) என இருதிறப்படும். பிற சமயங்கள் கூறும் ஆக்கல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்கள், அறிவும் உயிரும் அற்ற சடவுலகுக்கு மட்டுமே பொருந்தும். சேதனப் பொருள்கள் ஆகிய உயிர்களுக்கு அவை பொருந்தா. ஏனெனில் இறைவன் உயிர்களைப் படைப்பதும் இல்லை; அழிப்பதும் இல்லை. 'என்று நீ அன்று நான்' எனத் தாயுமானவர் பாடுவதற்கு ஏற்ப, உயிர்களும் இறைவனைப் போலவே அநாதி நித்தியப் பொருள்களாகும். ஆதலின் அறிவுடைப் பொருள்கள் ஆகிய உயிர்களின் நலம் கருதியே, இறைவன் மறைத்தல் அருளல் ஆகிய இருதொழில் களைச் சிறப்பு முறையில் செய்கின்றான்.

சடவுலகத்துக்காக ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத் தொழில்களும், சித்துலகத்திற்காக மறைத்தல் அருளல் என்னும் இருதொழில்களும் ஆக ஐந்து தொழில்களை இறைவன் முறையே இயற்றியருள்கின்றான் என்பது சைவசித்தாந்தம்.

> "அழிப்புஇளைப் பாற்றல்; ஆக்கம் அவ்வவர் கன்ம மெல்லாம்
> கழித்திடல்; நுகரச் செய்தல் காப்பது; கன்ம வொப்பில்
> தெழித்திடல் மலங்க ளெல்லாம் மறைப்பு,அருட் செய்தி தானும்
> பழிப்பொழி பந்தம் வீடு; பார்த்திடின் அருளே எல்லாம்"
>
> – சித்தியார், 57.

"ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக
இயம்புவர்கள்; அணுக்கள் இடர்க் கடல்நின்றும் எடுத்தே
ஊற்றமிக அருள்புரிதல் ஏது வாக
உரைசெய்வர்; ஒடுக்கம்இளைப் பொழித்தல்; மற்றைத்

தோற்றம்,மல பாகம்வரக்; காத்தல் போகம்
துய்ப்பித்தல்; திரோதாயி நிறுத்த லாகும்;
போற்றலரும் அருள்அருளே யன்றி, மற்றுப்
புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே!''

இவ்வாறு, இறைவனின் ஐந்தொழிற்றிறம் குறித்துச் சைவ சித்தாந்த நூல்கள் விளக்குவதற்கு உரிய, அரிய சான்றாக அமைந்தது, திருவாசகத்திலுள்ள சிறந்த திருவெம்பாவையே யாகும்.

"போற்றி எல்லா உயிர்க்கும் **தோற்றமாம்** பொற்பாதம்
போற்றி எல்லா உயிர்க்கும் **போகமாம்** பூங்கழல்கள்,
போற்றி எல்லா உயிர்க்கும் **ஈறாம்** இணையடிகள்,
போற்றிமால் நான்முகனும் **காணாத** புண்டரிகம்,
போற்றி யாம்உய்ய **ஆட்கொண்டருளும்** பொன்மலர்கள்"

எனவரும் திருவெம்பாவை (20) வரிகளையே, மதுரைச் சிவப்பிரகாசர் என்னும் சைவசித்தாந்தப் பேருரையாசிரியர், இறைவனின் ஐந் தொழிற்றிறத்தினை விளக்கும் சிறந்த பெருமேற்கோளாக எடுத்துக் காட்டியருள்கின்றார்.

## 12. ஐந்துமலங்கள்:

உயிர்களை ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்று மலங்கள் பற்றியுள்ளன. ஆணவ மலம் உயிர்களுக்கு அறியாமையை விளை வித்து நிற்கும். மாயாமலம் உயிர்களுக்குரிய தனு கரண புவன போகங்களைத் தோற்றுவிக்கும். கன்மமலம் உயிர்களின் இன்ப துன்ப நிகழ்ச்சிகளுக்குக் காரணமாக அமையும். உயிர்களை இம் மும்மலங்களும் பற்றி நிற்கும் தன்மை, நெல்லின் உமியும் தவிடும் முளையும் பொருந்தியிருப்பது போலும். நெல் மலங்களால் பிணிப்புண்ட உயிர் (பெத்தான்மா). ஆணவம் நெல்லின் உள்ள உமிபோலும். உமி அரிசியின் வடிவம் தெரியாமல் அதனை முழுவதும் மறைக்கும்; அதுபோல ஆணவ மலம் உயிரறிவை

முழுவதும் மறைத்து நிற்கும். மாயை தவிடுபோலும். தவிடு அரிசியின் இயல்பைச் சிறிது விளக்கும்; அதுபோல மாயா மலம் உயிரின் அறிவைச் சிறிது விளங்கச் செய்யும். கன்மம், நெல்லினின்று தோன்றும் முளை போலும். முளை தோன்றுமிடத்து அரிசியின் தன்மை விளங்காதவாறு போல, கன்ம மலமாகிய நல்வினை தீவினைகள் செய்யப்படுங்கால் உயிர் அவற்றில் மயங்கிக் கிடத்தலால், அதன் இயல்பு விளங்காது நிற்கும். நெல்லினின்று உமியும் தவிடும் முறையும் நீங்கிய நிலையில் உள்ள அரிசி, முறையே ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களும் நீங்கித் தூய்மை அடைந்து வீடுபேறு எய்திய நல்லுயிர் (முத்தான்மா) போலும்.

உயிர்களைப் பற்றி நிற்கும் ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்று மலங்களுடன், இறைவன் மாயேயம், திரோதாயி என்னும் வேறு இருமலங்களையும் உயிர்களின் நலங்கருதிச் சேர்த்தருள் கின்றான். இவற்றுள் மாயேயம் என்பது, மாயையினின்று தோன்றி உயிர்களின் அறிவை மயக்குகின்ற தத்துவப் பொருள்களின் தொகுதியாகும். திரோதாயி என்பது, உயிர்களுடன் ஒன்றி மறைந்து நின்று, ஏனைய மலங்கள் தத்தமக்குரிய தொழில்களைச் செய்யுமாறு தொழிற்படுத்தி உயிர்களுக்குப் பக்குவத்தை வருவிக்கும் மறைப்பு ஆற்றல் ஆகும்.

> ''மும்மலம், நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்,
> மம்மர்செய்து அணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று
> பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்;
> இம்மலம் மூன்றி னோடும் இருமலம் இசைப்பன் இன்னும்''
>
> ''மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்,
> ஏயும்மும் மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும்
> தூயவன் றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்,
> ஆய்வர்;இம் **மலங்கள் ஐந்தும்** அணுக்களை
> அணைந்து நிற்கும்''

எனவரும் சிவஞானசித்தியார் பாடல்களால், உயிர்களைப் பற்றி நிற்கும் ஐந்து மலங்களின் இயல்பினை நாம் இனிதறியலாம். இவ் ஐந்து மலங்களாலும் உயிர்கள் பிறப்பும் இறப்பும் உற்று, உலகம் நிரயம் துறக்கம் என்னும் மூன்றிலும், கொள்ளி வட்டமும் கறங்கும் போல மாறிமாறிச் சுழன்று உழன்று வருகின்றன.

"மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
 மூலஆ ணவம்ஒன்று; முயங்கி நின்று
பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று;
 பகர்மாயை ஒன்று;படர் கன்மம் ஒன்று;
தேகமுறு கரணமொடு புவன போகச்
 செயலாரும் மாமாயைத் திரட்சி ஒன்றென்(று);
**ஆகமலம் ஐந்தென்பர்;** ஐந்தும் மாறா(து)
 அருளென்ப தரிதென்பர், அறிந்து ளோரே"

என்று, சிவப்பிரகாசம் என்னும் சைவசித்தாந்த நூலில், உமாபதி சிவாசாரியரும் இந்த ஐந்து மலங்களின் இயல்புகளை விளக்கி யிருத்தல் காணலாம்.

இங்ஙனம் சிவஞானசித்தியாரில் அருள்நந்தி சிவாசாரியரும், சிவப்பிரகாசத்தில் உமாபதி சிவாசாரியரும் விளக்கியருளிய மலங்கள் ஐந்தினைப் பற்றிய குறிப்பு, சைவத்திருமுறைகள் வேறு எதனிலும் இத்துணைத் தெளிவு முறையிற் காணப்பெறவில்லை. எனவே இக்கருத்துக்கு மூலமும் முதலுமாக விளங்குவது, ஒருவகையில் திருவாசகமேயாகும் எனலாம்.

"குலம்களைந் தாய்,களைந் தாய்என்னைக்
 குற்றம், கொற் றச்சிலையாம்
விலங்கல்எந் தாய்,விட் டிடுதிகண்டாய்!
 பொன்னின் மின்னு கொன்றை
அலங்கல்அந் தாமரை மேனிஅப்பா!
 ஒப்பி லாதவனே!
**மலங்கள்ஐந் தாற்சுழல் வன்,**தயி
 ரிற்பொரும் மத்துறவே"

என்னும் திருவாசகம் நீத்தல்விண்ணப்பச் செய்யுளில் (29) "மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற் பொரும் மத்துறவே" என்னும் பொருள் பொதிந்த வரியே மலங்கள் ஐந்து என்னும் சைவசித்தாந்தத் தத்துவக் கருத்துக்கு அடிப்படையும் ஆதரவுமாய் அமைந்தது என்று கொள்ளலாம்.

## 13. ஒன்றாதல்-வேறாதல்-உடனாதல்:

இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பினை உலகிலுள்ள பல்வேறு சமயங்களும் வெவ்வேறு வகைகளில் தத்தமக்கு ஏற்ப விளக்குகின்றன. நமது இந்து சமயம் அதனை 'அத்துவிதம்' என்னும் சொல்லாற் குறிப்பிடுகின்றது. அத்துவிதம் என்னும் இவ் அரும்பெறற் சொற்றொடரின் பொருட்டிறம் குறித்துச் சங்கரர், இராமாநுசர், மருத்துவர் முதலிய பற்பலரும், தத்தமக்கு ஏற்ப ஒவ்வொரு வகையில் விளக்கம் செய்துள்ளனர். அவ் விளக்கத்திற்கு ஏற்ப எத்தனையோ பல நூல்களும், கொள்கைகளும், மரபுகளும், சமயப் பாகுபாடுகளும் ஏற்பட்டு நிலவி வருகின்றன.

அத்துவிதம் என்னும் இச் சொற்றொடருக்குச் சைவ சித்தாந்தப் பெருஞ் சான்றோராகிய ஆசிரியர் மெய்கண்டார் பெருமானும், தமக்கு முற்பட்ட தமிழகத்துச் சிவநெறிச் சான்றோர்களின் அடிச் சுவட்டைப் பின்பற்றிப் பொருள் விளக்கம் கண்டுள்ளார்.

> ''பொய்கண்டார் காணாப் புனிதம்எனும் அத்துவித
> மெய்கண்ட நாதன்அருள் மேவும்நாள் எந்நாளோ?''

என வேதாந்த சித்தாந்த சமரச ஞானச் சான்றோராகிய தாயுமான அடிகள், அத்துவிதச் சொற்றொடருக்கு மெய்கண்டார் விளக்கி யருளிய பொருளை வியந்து போற்றியிருத்தல் காணலாம்.

இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பை, ஒருசிலர் பொன்னும் பணியும்போல் அபேதம் என்பார்; மற்றும் சிலர் இருளும் ஒளியும்போல் பேதம் என்பர்; வேறு சிலர் சொல்லும் பொருளும் போற் பேதாபேதம் என்பர். இறைவனும் உயிர்களும் தம்முள் பொருட்டன்மையால் இரண்டாயினும், பிரிக்க முடியாத கலப்புத் தொடர்புடையன என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. 'அத்துவிதம்' என்னும் சொற்றொடருக்கு ஆசிரியர் மெய்கண்டார் 'இரண்டு அன்மை' எனப் பொருள் விளக்கினார். பிரிக்க முடியாதபடி சேர்ந்துள்ள இரு பொருள்களின் கலப்பே, அத்துவிதம் எனப் பெறும்.

இவ் அத்துவிதமாகிய கலப்பு ஒன்றாய் நிற்றலா? வேறாய் நிற்றலா? உடனாய் நிற்றலா? எனின், இம் மூன்றுமாயும் நிற்றலே, அத்துவிதம் என்பது சைவ சித்தாந்தம். உயிர்கள் நிலைத்தற்கு இறைவன் அவற்றோடு ஒன்றாய் நிற்கின்றான். பொருள்களை உயிர்கள் அறியும்படி செய்தற்கு, இறைவன் உயிர்களுக்கு வேறாக நிற்கிறான். பொருள்களை உயிர்கள் நுகரும்படி செலுத்துவதற்கு, இறைவன் உயிர்களோடு உடனாக நிற்கிறான்.

கலத்தற் றன்மையால் உடலின் உயிர்போல் உயிர்களோடு ஒன்றாகியும், பொருட்டன்மையால் கண்ணிற் சூரியன்போல உயிர் களுக்கு வேறாகியும், உயிர்க்கு உயிராதற் றன்மையால் கண்ணொளியின் உயிருணர்வுபோல் உயிர்களுக்கு உடனாகியும், இறைவன் நிற்கின்றான். உயிர்கள் நிலைத்தல், அறிதல், நுகர்தல் என்னும் மூன்று பயன்களையும் எய்துதற்கு, இறைவன் உயிர் களோடு முறையே ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் நிற்பது இன்றியமையாததாக இருக்கின்றது எனச் சைவ சித்தாந்த நூல்கள் பலவும் சாற்றுகின்றன.

இங்ஙனம் இறைவன் உயிர்களுடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கின்றான் என்னும் சைவ சித்தாந்த உண்மையினைத் திருவாசகப் பாடல்கள் ஆங்காங்கே சிறப்புறக் குறித்து விளக்குதல் காணலாம்,

> "வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
> ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
> கோனாகி யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
> வான்ஆகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே"

எனவரும் திருவாசகச் செய்யுளில் "வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி ஊனாகி உயிராகி" என்றதனால் **ஒன்றாதலும்;** "உண்மையுமாய் இன்மையுமாய்" என்றதனால் **உடனாதலும்;** "கோனாகி யான் எனது என்று அவர் அவரைக் கூத்தாட்டுவான் ஆகி" என்றதனால் **வேறாதலும்** ஆகிய மூவகை நிலைகளும் இறைவனுக்கு உரியனவாதல் உணர்த்தப்பெற்றிருத்தல் காணலாம். இவ்வாறே,

''இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை, யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே''

எனவரும் திருவாசகச் செய்யுளின்கண், **''நீயலாற் பிறிது மற்றில்லை''** என்பது ஒன்றாதலையும்; **''ஒன்றும் நீயல்லை''** என்பது வேறாதலையும்; **''அன்றிஒன்றில்லை''** என்பது உடனாதலையும் உணர்த்தி நிற்றல், நாம் பெரிதும் உளம்கொளத்தக்கது.

சிவபுராணத்தில் வரும் ''ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க'' என்னும் வரி அன்பர்கள் அனைவரும் அறிந்தது. இதன்கண் 'ஏகன்' என்பது ஒன்றாதலையும்; 'அநேகன்' என்பது வேறாதலை யும்; 'இறைவன்' என்பது உடனாதலையும் முறையே குறித்து நிற்கின்றன என்று கொள்ளுதல் பொருந்தும். பொருத்தம் மிக்க இப்பொருட் குறிப்பின் சிறப்பினை உணர்ந்து வியந்தே, இத் திருவாசக வரியினைப் பெரிதும் அடியொற்றி,

''ஏகனும் ஆகி அனேகனும் ஆனவன்
நாதனும் ஆனான்என்று உந்தீபற
நம்மையே ஆண்டான் என்று உந்தீபற''

என்று திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் என்னும் சைவ சித்தாந்தப் பெருஞ் சான்றோர் திருவாய் மலர்ந்தருளுவாராயினர்.

## முடிவுரை:

இதுகாறும் கூறிவந்த சிலவற்றால் திருவாசகம் சைவசித்தாந்தம் என்பவற்றின் சிறப்பும், அவைகள் இரண்டிற்கும் உரிய தொடர்பும் பிறவும் பற்றி, ஓரளவேனும் யாவரும் இனிதுணரலாம். திருவாசகம்

என்னும் தெய்விக இலக்கியமும், சைவ சித்தாந்தம்' என்னும் தமிழகத் தெய்விகத் தத்துவக் கொள்கையும், தமிழ் மக்களாகிய நாம் பெற்றுள்ள சிறந்த பெருஞ் செல்வங்களாகும். இத்தகைய பல பெருஞ் சிறப்புகளை உடைய நம்முடைய சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கையானது, ஆயுந்தோறும் அறிஞர்களுக்கு ஆராப் பெருவிருந்தாக அமைந்து விளங்குகிறது. "ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்" எனத் திருமூலர் பாடுவதுபோல, அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ்மொழியின் அகலமும் நீளமும் ஆழமும் ஆய்ந்து இன்புற விழைவோர் அனைவரும், சைவத் திருமுறை களையும், சைவ சித்தாந்த சாத்திரங்களையும் புறக்கணித்து ஒதுக்காமல், விரும்பிக் கற்று மகிழும் கட்டுப்பாடு உடையவராவர். இம்மை வாழ்வில் இதனின் மிக்க இன்பப் பேறு பிறிது ஒன்றில்லை எனத் துணிந்து கூறலாம். ஜான் மீல்ட்டன் * என்னும் ஆங்கிலப் பெருங்கவிஞர் பாடுவது போல,

"எத்தகை இன்ப ஊற்றாய்
இறையருள் நூல்கள் உள்ள!
அத்தகை யவற்றை அந்தோ,
அறிவிலார் கடினம் என்பர்!
வித்தகக் கண்ணன் ஊதும்
வேய்ங்குழல் இசைபோல், இன்பம்
மிக்கொளிர்ந்து, அறிஞர்க்கு ஆரா
விருந்தென மிளிரும் நன்றே"

– ந. ரா. முருகவேள்

---

* "How charming is divine philosophy!
Not harsh and crabbed as dull fools suppose!
But musical as is Apollo's lute,
And a perpetual feast of nectar'd sweets
Where no crude surfeit reigns".

– John Milton, Comus.

என்று, நாமும் நமது சைவ சித்தாந்தம் பற்றிப் பாடி மகிழலாம். கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானியாகிய தேல்சு என்பார், தாம் ஒரு விலங்காக அல்லாமல் மனிதனாகவும், பெண்ணாக அல்லாமல் ஆணாகவும், கானகனாக அல்லாமல் கிரேக்கனாகவும் பிறந்ததற்குப் பெருமிதம் கொண்டு மகிழ்கின்றார். அதுபோல நாமும் "நரர்பயில் தேயம் தன்னில் நான்மறை பயிலா நாட்டில் விரவுதல் ஒழிந்து" தமிழராகவும், சைவராகவும், சைவசித்தாந்தச் செந்நெறி யாளராகவும் பிறக்கப்பெற்றமை குறித்துப் பெருமிதம் கொண்டு மகிழலாம்.

"மனிதனாய், ஆணாய்க், கிரேக்கனாய்ப் பிறந்த
மாட்சிமைக்கு அறிஞர்தாம் ஒருவர்
நனிமிக மகிழ்ந்தார்; நலம்மிகு தமிழன்,
நற்சைவன், சைவசித்தாந்தி,
எனஇவண் பிறந்த இனியநற் பேற்றை
எண்ணி,நாம் இறையருள் வழுத்தித்
துனியறு சைவச் செந்தமிழ் வளர்க்கும்
தொண்டுகள் புரிந்துநன் றுய்வாம்"

– ந. ரா. முருகவேள்

* "The three blessings for which I am grateful to Fortune are first that I was born a human being and not one of the brutes; second that I was born a man and not a woman; third that I was born a man and not a barbarian"

– Thales, in Diogenes Laertes' Thales

## திருவாசகம் முதற்கட்டுரையின் அடிக்குறிப்புக்கள்

1. 'Proverbs are the literature of reason, or the statements of absolute truths, without qualification. Like the sacred books of each nation, they are the sanctuary of its institutions." R. S. Emerson

2. "Simple words, ,hort maxims, homely truths, old sayings, are the masters of world. In them is the hiding of the power that forms the character, controls conduct and makes individuals and nations what they are. Great reformations, great revolutions in society, great areas in human progress and improvement, start from good words, right words, sound words, spoken in the fitting time, and finding their way to human hearts as easily as the birds find their homes". – D. March

3. "The genius, wit and spirit of a nation are discovered in its proverbs''. – Francis Bacon

4. "There are indeed but few poems in any language that can surpass Thiruvasakam or 'the hold word' of Manickavasagar, in profundity of thought. in earnestness of feeling or in the childlike trust, in which the struggling human soul, with its burdens of intellectual and moral puzzles, finally finds shelter".

   – Prof. P. Sundaram Pillai,

5. "Thiruvasakam depicts in beautiful hymns, the progress of the soul, from the bondage of ignorance and passion into the liberty of light and love. Its first awakening, its joy and exaltation, waywordness and despondency, struggle and unrest, the peace and the joy of union... Thiruvasakam is the masterpiece of Tamil literature. It is the highest and purest expression of human experience of the Divine Grace". – Rev. Dr. G. U. Pope